21/2

ௐ

# ப்ரஹ்ம சூத்திரமும்

## சங்கர பாஷ்யமும்

(நான்காவது அத்யாயம்)



தமிழ் உரை ஆசிரியர்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்.

வேதாந்த ஆசாரியாள்,

தலைவர்,

ஸ்ரீ ல ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்

பிள்ளையார் பாளையம் சாலை தெற்குவாசல்,

மதுரை — 1.

21/2

ௐ

# ப்ரஹ்ம ஸூத்ரமும்

## சங்கர பாஷ்யமும்

(நான்காவது அத்யாயம்)







தமிழ் உரை ஆசிரியர்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்.

வேதாந்த ஆசாரியாள்,

தலைவர்,

ஸ்ரீ ல ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்

பிள்ளையார் பாளையம் சாலை தெற்குவாசல்,

மதுரை — 1.


---



1985 விலை 8-00

21/2

## நூற்சிறப்பு

### விருத்தம்.

உலகினில், பிரம சூத்ரம் ஒளிர்மிகு கதிரவன்போல்,
இலகு நூல் அனைத்தினுக்கும் ஏற்றமாமிந்த நூலை,
குலவுசத்குருவின் முன்னர் கோதறவுணர்ந்து வோதி,
நிலமிசை முத்தியின்பம் நிச்சயம் பெறுவீரம்மா.



# பகவான் சங்கரர்



## சங்கர ஸ்துதி

3 3 3
குருபுங்கவ ! புங்கவ கேதன ! தே
4
ஸமதாமயதாம் நஹி கோபி ஸுதீ
3 4
சரணாகத வத்ஸல! தத்வ நிதே !
4 3
பவ சங்கர ! தேசிக ! மே சரணம்

பொருள் :-

குரு சிரேஷ்டரே ! உயர் குருநாதரே !
உமக்கு சமமான ஞானிகள் எவருமிலர்.
சரணடைந்தோர்க்கு அருள்பவரே !
தத்வஞானக் களஞ்சியமே !
ஹே சங்கர ! ஹே தேசிக ! எனக்கு
சரணமளிப்பீராக,



பவ சங்கரதேசிகமே சரணம்

# இந்நூல் உரையாசிரியர்



## ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்

யோக வேதாந்த ஆசாரியாள்.

ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்.

பிள்ளையார் பாளையஞ்சாலை,

தெற்கு வாசல்

மதுரை — 1.

## ∴ பவசங்கர தேசிகமே சரணம்

பிரஹ்ம சூத்திரம் நான்காவது அத்தியாயம்.

### அணிந்துரை

இரவும், பகலும், பொய்யும், மெய்யும், விருப்பும் வெறுப்பும், குளிரும், கொதிப்பும், இன்பமும் துன்பமும், உண்மையும் இன்மையும், பாவமும் புண்ணியமும், பிறவும், ஒன்றுக்கொன்று முரண்பட்ட பொருள் நிறைந்த சம்சாரம் இது. இதில் எறும்பு முதல் இரண்ய கருப்பன் வரை எல்லோரும் இறந்து பிறந்து கொண்டுதிரிகின்றனர்.

இவ்வுலகம் புதுமையானது. இவ்விசித்ரமான உலகையெண்ணிப் பார்க்க இயலாது. இதைத்தான் அநிர்வசநீயமென்று வேதாந்திகள் இயம்புவார்கள். இன்ப துன்பம் நிறைந்த இச்சம்சாரத்தில் தேவயோனியிலும் அசுரயோநியிலும், திரியக்யோனியிலும், மானவயோநியிலும் இந்த ஜீவன் எழுந்து விழுந்து கொண்டு இருக்கிறான். அவலநிலையில் கவலைமிகக் கொண்டு அல்லல் பல உற்றுகிறான். அவனி முழுவதும் குரங்குபோல் அலமந்து திரிகிறான்.

வேலையில் விழுந்த துரும்பு இரு அலைகளால் அடிபட்டு இங்குமங்கும் இடர்படுவது போல் இச்சீவனும் பிறப்பு இறப்பு என்னும் பெரும் அலையால் அடியுண்டு பெருமூச்சு விட்டுத்திரிகிறான். கப்பலில் ஏறிகரைசேர வந்தவன் கப்பல் கவிழ்ந்து கடலில் விழுந்ததும் எங்ஙனந் தவிப்பானோ; அங்ஙனம் இவனும் தவிக்கிறான். கடலில் விழுந்தவனுக்கு கப்பல் தேவை, பவக்கடலில் விழுந்தவனுக்கு ஞானகப்பல் தேவை.

ஞானம் — வேதம். வேதத்திலிருந்துதான் ஞானம் உதயமாகின்றது. வேதம் இந்து தருமத்திற்கும் இந்து

கலாசாரத்திற்கும் இந்துபண்பாட்டிற்கும் தத்வ நூல்களுக்கும் பிராணன் என்று சொல்லலாம். நமது பாரத நாட்டின் பண்புகளும் ஒழுக்கங்களும் சீலமும் ஜீவன சக்தியும் ஆலய வழிபாட்டு முதலிய அறநெறிகளும் அறிவுக்களஞ்சியமும் வேதத்தில் நிறைந்திருக்கின்றன. மேலும் அறம், பொருள் இன்பம், வீடு என்னும் இந்த நான்கு புருஷார்த்தங்களுக்கும் உரிய சாதனைகள் வேதத்தில் கிடைக்கின்றன. தங்களுடைய சித்தாந்தத்தை நிலை நிறுத்துவதற்கு அறிஞர் பெருமக்கள் அனைவரும் வேதத்தை பிரமாணமாகக் கொண்டிருக்கின்றனர். ''வேதநான்கினும் மெய்ப்பொருளாவது நாதநாம நமச்சிவாயவே'' என்று தேவாரம் செப்புகின்றது. ஒரு மனிதன் உயிருடன் இருக்கிறான் இல்லை என்பதற்கு அவனுடைய மூச்சுக் காரணமாக இருக்கின்றது. அதுபோல, இறைவன் இருக்கிறான் என்பதற்கு வேதம் காரணமாக இருக்கின்றது.

''மந்த்ர பிராஹ்மணாத்மக்கோ வேத: வேதத்தில் இரண்டு பிரிவுகள் இருக்கின்றன. ஒன்று மந்திரபாகம் மற்றொன்று பிராமணபாகம். இன்ன இன்ன தேவதைகளை இப்படி இப்படி அழைக்கவேண்டும் என்று மந்திரங்கள் வருகின்ற பகுதிக்கு மந்திரபாகம் என்று பெயர். யக்ஞ யாகாதிகளை விரிவாக எடுத்துரைக்கின்ற பகுதிக்கு பிராமண பாகம் என்று பெயர்.

வேதம் நான்கு. அவை ரிக்கு, யஜுர், சாமம், அதர்வணம் எனப்படுகின்றன. இவ்வேதத்தின் இறுதியில் வருகின்ற உபநிஷத்துக்கள் வேதாந்தம் எனப்படுகின்றன. வேதாந்த தரிசனம் பிரஸ்த்தானதிரயம் எனப்படும். அவை உபநிஷத் பிரஸ்தானம் கீதாபிரஸ்தானம் பிரஹ்ம சூத்திர பிரஸ்தானம். இஃது பகவான் வியாசரால் செய்யப்பட்டது. இந்நூலில் வேத விருத்தமான மதங்களைக் கண்டித்து பிரஹ்ம தத்துவத்தை நன்றாக விளக்கியிருக்கின்றது. இந்நூலுக்கு நான்கு பெயர்கள் உள்ளன. அவை வேதாந்த தரிசனம் பிரஹ்ம சூத்திரம், சாரீரகம், உத்தரமீமாம்சை. பிரஹ்ம சூத்திரத்தின் உரையாசிரியர்கள் பலர்:-

| நாமம் | பாஷ்யநாமம் | மதம் |
| --- | --- | --- |
| 1. சங்கரர். | சாரிரகபாஷ்யம். | கேவலாத்வைதம் |
| 2. பாஸ்கரர். | பாஸ்கரபாஷ்யம். | பேதாபேதம் |
| 3. ராமனுஜர். | ஸ்ரீபாஷ்யம். | விஸிஷ்டாத்வைதம் |
| 4. மத்துவர். | பூரணபிரத்யபாஷ்யம். | துவைதம் |
| 5. நிம்பார்க்கர். | வேதாந்தபாரிஜாதம். | துவைதாத்வைதம் |
| 6. ஸ்ரீகண்டர். | சைவபாஷ்யம். | சைவவிஸிஷ்டாத்வைதம் |
| 7. ஸ்ரீபதி. | ஸ்ரீகரபாஷ்யம். | வீரசைவவிஸிஷ்டாத்வைதம் |
| 8. வல்லபர். | அணுபாஷ்யம். | சுத்தாத்வைதம் |
| 9. விஞ்ஞானபிட்சு. | விஞ்ஞானவாதம். | அவிபாகத்வைதம் |
| 10. பலதேவர். | கோவிந்தபாஷ்யம். | அசிந்திய பேதாபேதம் |

இவர்கள் எழுதிய பாஷ்யம் மண்ணில் மின்மினி போல மிளிர்கின்றது. நமது சங்கரர் எழுதிய பாஷ்யம் விண்ணில் கதிரவன்போல் பிரகாசிக்கின்றது.

இந்த அத்தியாயத்தில் முப்பத்தெட்டு அதிகரணங்கள் இருக்கின்றன. சூத்ரத்தின் தொகை எழுபத்தெட்டு. இதை அருளியவர் பகவான் வியாசர். அவர் திருமாலின் அவதாரமாவர் ''துவாபரே துவாபரே விஷ்ணுர்

வியாசரூபீ மகாமுநி : என்னும் வாக்கியத்தால் ஊகித்துணர்க. இதனுல் இந்நூல் சீரும் சிறப்பும் தெய்வத் தன்மையும் செறிந்ததென்பது தெற்றெனத் தெளிவாகும். இப்புனித நூலே குருவாயிலாக அன்புடன் ஓதி உணர்ந்து வந்தவர்கள் இன்பநிலையை என்றும் எய்துவர் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. அணிந்துரை முற்றிற்று.

இந்நூலின் தமிழ் உரையாசிரியர்,

**ஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்,**

வேதாந்த ஆசாரியார்.

தலைவர், ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடம்,

பிள்ளையார் பாளையம் சாலை, தெற்குவாசல்.

மதுரை I

வேதாந்தம் என்னும்விமல சித்தாந்தத்தில் விளங்கிடும் கார்க்கி, மைத்ரேயீ, மதாலிசா, சுலபையென்னும் தூய நங்கையர் போன்றவரும், தொன்றுதொட்டு ஞானமிருதத்தை நன்கு பருகியவரும் ஞாலத்தில் ஞானநூல் ஞாயிறு போல ஒளி வீசட்டும் என்ற மதியுடையவரும், அருட் செல்வத்தோடு பொருட் செல்வம் நிறைந்தவரும், மாரியைப் போல வாரி வழங்குபவரும், நாள்தோறும் ஞான நூலை நன்கு பயின்று வருபவரும்; எம்மணியினும் சிறந்த தங்கமணியம்மையார் இந்நூலுக்கு ஆக்கத்தையும் ஊக்கத்தையும் அள்ளித் தந்ததற்கு அவரும், அன்னார் குடும்பத்தாரும் ஆயுள் முழுவதும், ஆரோக்கியமும் பெற்று இன்புடன் வாழ எனது குல தெய்வமாகிய பகவத் பாதாளை பன்முறை வேண்டுகிறேன்.

சுபம்.

# சூத்திர அடக்கம்



# பிரஹ்ம சூத்திரம்

*நான்காவது அத்யாயம்*

இந்த அத்யாயத்திற்குப் பலாத்யாய மென்று பெயர். இதன்முதலாவது பாதத்தில் ஜீவன்முக்தி விசாரிக்கப் படுகிறது.

1) ஆவிருத்தியதிகரணம். சூ. 1—2

3

## சூ. ஆவிருத்தி அசகிருத் உபதேஸாத் 4—1—1

ஆவிருத்தி; அசகிருத், உபதேசாத் என்று பிரிக்கவும்.

ப. உ. ஆவிருத்தி := அப்யாசஞ் செய்ய வேண்டும். அசகிருத்உபதேசாத் = சுருதிகளில் அப்யாசம்பண்ண வேண்டும் என்று பன்முறைப் பகரப்பட்டிருக்கிறது.

வி. உ. மூன்றுவது அத்யாயத்தில் பரவித்தைக்குரிய சாதனங்களையும், அபர வித்தைக்குரிய சாதனங்களையும் நன்கு விசாரித்திருக்கின்றது. பரவித்தை — பிரஹ்ம ஞானம். அபர வித்தை — சகுண விக்ஞானம். இங்கு — நான்காவது அத்யாயத்தில். பலத்தைப்பற்றி விசாரஞ் செய்யப்படுகிறது. பலன் — முக்தி. இதற்கிடையில் இதன் தொடர்பான சில வற்றையும் சிந்திக்கப்படுகிறது.

இங்கு மேலே சொன்ன சிலமுறையும் கையாளப் படுகிறது — " ஆத்மாவாஅரே (மைத்ரேயீ) த்ரஷ்டவ்ய : பிரு.உ (4—5—6) எனது அருமை மனைவியே ! ஆத்மாவைத்

4

தெரிசிக்கவேண்டு மென்றும், "தமேவ தீரோ விக்ஞாய பிரக்ஞாம் குர்வீத" பிரு. உ. (4—4—21) அறிவாளி அந்த ஆன்மாவையறிவதற்கு நூல்வாயிலாகப் பரோக்ஷஞானத் தைப் பெற்று அபரோக்ஷஞானத்தைப் பெறும் பொருட்டு, பிரக்ஞாம் குர்வீத — சமை முதலிய சாதனங்களைப் பெற

வேண்டும் என்றும், ''ஸோ அந்வேஷ்டவ்ய:'' அதையடைய முயற்சிக்க வேண்டும் என்றும், (அதை — ஆன்மாவை) பகவான் யாக்ஞ வல்க்கியர் அருளியிருக்கிறார். இதில் ஐய முண்டாகிறது. என்ன ஐயம்? சிரவணம், மனனம், நிதித் யாசனம் ஒரு முறை செய்யவேண்டுமா அல்லது பன்முறை செய்ய வேண்டுமா என்பது ஐயம். ஐயம் — சந்தேகம்.

உனக்கு எப்படித் தெரிகிறது எனின்? ஒரு முறை செய் தால் போதும், எது போல பிரயாஜாதிவத். பிரயாஜாதியாகத் தை யொருமுறை யோதினல் போதும் என்பது போல். ஒரு முறை சிரவணம் மனனம் நிதித்யாசனஞ் செய்தால் போது மென்பது எதிரியின் வாதம். வாதி — அது பொருந்தாது. ஏனெனின், பன்முறை பகர்ந்திருப்பதால் — ''ஸ்ரோதவ் யோ மந்தவ்யோ நிதித்யாசிதவ்ய :'' சிரவணஞ் செய்ய வேண்டும், மனனஞ் செய்ய வேண்டும், நிதித்யாசனஞ் செய்ய வேண்டு மென்பது பொருள். வாதி — அங்ஙன மாயின், ஒருமுறை சிரவணம், ஒருமுறை மனனம், ஒருமுறை நிதித்யாசனஞ் செய்ய வேண்டு மென்பது தானே பொருள் என்பாயாகில், அதுமுறையன்று. ஞானம் வரும் வரை மேற்கூறிய சிரவணுதிகள் செய்ய வேண்டும். உமிகளைந்து அரிசி வரும் வரை நெல்குத்த வேண்டுமென்றபடி.

ஆவிருத்தி மீண்டும் மீண்டும் நினைப்பது. ''குருமு பாஸ்தே'' குருவை வழிபடுகின்ருன், ''ராஜானமுபாஸ்தே'' மன்னனை வழிபடுகின்ருன், என்ற இடங்களில் ஒருமுறை உபதேசங்காணப்படுகிறது. இருப்பினும் பன்முறை வழி படுகிருன் என்பது பொருள். வெளி நாடு சென்ற தமது மணவாளனை மனைவி நினைக்கிருள் என்ருலும் அடிக்கடி நினைக்கிருள் என்பதுதானே பொருள். அவ்வாறிருக்க சிரவணுதிகள் பன்முறைப் பகர்ந்திருக்க ஒருமுறை யென்பது

எவ்வாறு பொருந்தும், பொருந்தா தென்பது குறிப்பு. இதனுல் ஞானம்வரும் வரை கேட்டல் சிந்தித்தில் தெளிதல் செய்ய வேண்டு மென்பது இனிது புலனும். சூ. 1

இதையுணர்த்தும் பொருட்டு அடுத்த சூத்திரம்

3

## சூ. லிங்காச்ச 4—1—2

லிங்கமென்னுஞ் சொல் பல பொருளைக்குறித்துவரும். இங்கு அது பிரமாணத்தைக்குறிக்கும்.

ப. உ. ச = மேலும். லிங்காத் = பிரமாணவாக்கியமூல மாகவும் (தெரிந்து கொள்ளலாம்)

வி. உ. பிரமாணமும் சிரவணாதிகளை அடிக்கடிச் செய்ய வேண்டுமென்று உணர்த்துகின்றது. எவ்வா றெனின் — ''ஆதித்ய உத்கீத:'' இவ்வாறு உத்கீதை விக்ஞா னத்தை முன்வைத்து ஒருகுழந்தை யுண்டாகுமே என்று அஞ்சி அதைவிலக்கிவிட்டு "ரஸ்மீம்ஸ்த்வம் பர்யாவர்த்யாத்" சா. உ. (1—5—1) இதனுல் ஏகுழந்தாய்! நீ சூரியன், கதிர்களைச், சூரியனுக்கு வேருகவழிபடு. இம்மாதிரி. வெகு குழந்தையை அடையும் பொருட்டு மீண்டும் கேள்விகளைக் கேட்க வேண்டு மென்பதை அறிவிக்கின்றது.

வாதி — அடையவேண்டிய பயனைக்கருதி ஆவிருத்தி தேவைப்பட்டாலும், ஆன்மா அடைந்த பொருள். நித்தி யமாயும், சுத்தமாயும், போதரூபமாயும் ஆன்மா இருக்கிற தென்று அறிவிப்பதற்கு ஆவிருத்தி எதற்காக? ஒரு தடவை கேட்பதால் தத்வ ஞானம் எங்ஙன முண்டாகும் என்பாயாகில் அது பொருந்தாது. ஏனெனின், ஆவிருத்தி செய்த போதிலும் ஞானம் உண்டாகிறதில்லை. அவ்வாறிருக்க தத்வமசி யென்னும் வாக்யத்தை யொரு முறை கேட்பதால் ஞானம் எவ்வாறு உண்டாகும், சிரவணம் மட்டும் தத்வ

ஞானத்தை யுண்டுபண்ண இயலாது, ஆனுல் மனன நிதித்யாசனமும் வேண்டும். அதன் பிறகு தத்வ சாட்சாத்கார முண்டாகும். அங்ஙனம் மொழியின், சிரவணம் அடிக்கடிச் செய்ய வேண்டும் என்பதில் பயனென்றுமில்லை. இது சரியன்று. எதனுலோ வெனின்? ஒரு முறை யுக்திரூப மனனம் செய்வதால் அகம் பிரஹ்மம் என்னும் போத முண்டாகிவிடும். ஒரு வேளை கேள்வியும் மனனமும் சாமான்ய ஞானத்தையுண்டு பண்ணுகின்றது, விசேஷ ஞானத்தை யுண்டு பண்ணவில்லை. எனது வயிற்றில் சூலமிருக்கிறது என்னும் வாக்கியத்தில் உடல் நடுக்கம், தடுத்திருப்பது முதலிய குறிகளைக் கொண்டு மற்றையற்கு சாமான்ய ஞானமுண்டாகும், விசேஷ ஞானமுண்டாகாது.

மேலும் முதன் மாணுக்கனுக்கு ஒரு முறை யோதினுல் உடனே ஞானமுண்டாகும், ஆனுல் இடை மாணுக்கன் அல்லது கடைமாணுக்கனுக்குப் பன்முறை பகர வேண்டும். எவ்வாறு சாந்தோக்ய உபநிடதத்தில் உத்தலாகர் தனது புதல்வன் சுவேத கேது விற்கு (தத்வமசி) மகாவாக்யத்தை ஒன்பது தடவை யோதினுர். இங்கு ஆவிருத்திப் பயனுடையதாகின்றது. சிரவணத்தால் ஐயமும், மனனத்தால் பிரமாணத்தில் உண்டான சந்தேகமும், நிதித்யாசனத்தால் பிரமேயத்தில் எழும் ஐயமும் அகன்று போகும். பிரமாணகதம் — வேதாந்த வாக்கியங்கள் உலகத்தை உணர்த்துகின்றனவா, அல்லது முக்தியை மொழிகின்றனவா என்பது. பிரமேயகதம் — முக்தியுண்மையா அல்லது உலகங்கள் உண்மையா என்பது.

ஆவிருத்தி, ஆன்மாவை யடைவதற்கு முன்னேடி சாதனம். தத்பதவாச்சியம் துவம்பதவாச்சியம், முறையே ஈசனும் ஜீவனுமாம். இவர் இருவரும் அஞ்ஞானம் சம்சயம் விபர்யயம் இவைகளால் மறைபட்டிருக்கிருக்கின்றனர்.: ஆன்மா நிரம்சம், ஆயினும் தேகம் இந்திரியம்,

மனமுதலியவைகளோடு பொருந்துவதால் அம்சம் ஆன்மா-விற் கற்பிக்கப்படுகிறது.

தேகாதிகளுக்கு வேருக ஆதமச்சைதன்யம் இருந்த போதினும் உறக்க நிலையில் ஒன்ருகவே தெரிகிறது — ''யத்வை தந்ந பஸ்யதி பஸ்யன்வை தந்ந பஸ்யதி'' பிரு உ. (4—3—23) யத்வை = அப்படிப்பட்ட ஆன்மா (உறக்-கத்தில்) பஸ்யன் = பார்த்துங் கூட. ந பஸ்யதி = பார்க்கிறதில்லை. நான் ஆத்மா ஆனல் பரமாத்மாவிற்கு வேறு என்று சாமான்ய ஞானம் பொதுவாக எல்லார்க்கும் உண்டாகும். இதனல் அக்ஞானமும் அதன் காரியமும் நீங்க மாட்டா. அதன் நீக்கம் தத்வமசி அகம் பிரஹ்மாஸ்மி யென்னும் வாக்கியத்தால் உண்டாகும். இந்த ஞானம் அநவரத பழக்கத்தால் வரும். எனவே ஆவிருத்திப் பயன் உள்ளதாக ஆகின்றது.

உத்தம அதிகாரி களுக்கு அப்யாசம் தேவையில்லை யென்ருலும் மந்த மத்யம அதிகாரிகளுக்கு அப்யாசம் அவஸ்யம் வேண்டும். அப்யாசம் ஆன்மாவின் அடைவிற்கு முன்னேடி சாதனம். ஞானம் வரும் வரை அப்யாசம் வேண்டும் அதன்பின்பு வேண்டுவதில்லை. சுருதியும் அவ்வாறு சொல்லு கின்றது — ''கிம்பிரஜயா கரிஷ்யாமோ யேஷாம் நோஅயம் ஆத்மா அயம் லோக:'' பிரு — உ. 4—4—22 இ—ள். யேஷாம் நோ = தத்வதரிசிகளாகிய எங்களுக்கு. அயம் = இந்த. ஆத்மா = பிரஹ்மம். அயம் லோக: = எல்லாமாக இருக்கிறது. (அவ்வாறிருக்க) கிம் பிரஜயா கரிஷ்யாம: = பெண்டு பிள்ளை மண் மனையிவை களால் என்ன பயன்? ஒன்றுமில்லை யென்பது உறுதி. திரு மறை போல் திருமாலும் செப்புகின்ருர் —

யஸ்த்வாத்மரதி ரேவஸ்யாத் ஆத்மத்ருப்தஸ்சமாநவ:

ஆத்மந்யேவச சந்துஷ்ட : தஸ்யகார்யம் நவித்யதே. கீ, 3—12

இ—ள்.

து = ஆனல். ய: = எவன். ஆத்மரதி: ஏவஸ்யாத் = தன்னிடத்தில் ரமித்து கொண்டிருக்கிருனே. ஆத்ம திருப்தஸ்ச மாநவ: = எந்தமனிதன் தன்னிடத்தில் நிறைந்த மனமுடையவனுக இருக்கிருனே. ஆத்மந்யேவச சந்துஷ்ட: தன்னிடத்தில் உவகை கொண்டிருக்கிருனே. தஸ்ய = அவனுக்கு — அந்த ஞானிக்கு. காரியம் = கடமை நவித்யதே = செய்ய வேண்டுவது ஒன்று மில்லை என்பது பொருள். ஆயினும் தத்வமசி யென்னும் வாக்கியத்தைக் கேட்டும் விரைவில் யாருக்கு ஞானமுண்டாகவில்லையோ அவனுக்கு (ஆவிருத்தி) அப்யாசம் வேண்டு மென்பது கருத்து

அதற்காக நான்வேறு பரமாத்மாவேறு என்று எண்ணிக் கொண்டு அப்யாசஞ் செய்யக் கூடாது. ''நஹி வர காதாய கந்யாம் உத்வாஹயந்தி'' என்பது ச. பா. இ—ள்' கன்னிகையை மணந்து கொள்வது கணவனைக் கொல்வதற்கன்று என்பது மேலே சொல்லிய மொழிக்குப் பொருள்.

ஒருநாள் பழகில் உணராத ஒன்று

பல நாள் பழகில் பலிக்குந்தானே'' என்னும் வாக்கியம் ஈண்டு உணரற்பாலது. எனவே ஆவிருத்தி அவஸ்யம் செய்ய வேண்டும் என்பது புலனும் சூ. 2

4

2) ஆத்மத்வ உபாசன அதிகரணம். சூ. 3

அ—கை.

முந்திய அதிகரணத்தில் சிரவண முதலிய சாதனங் களை அடிக்கடிப் பழக வேண்டு மென்று அருளி இருக் கிறது. இவ்வதிகரணத்தில் தியானஞ் செய்யும் பொழுதும்

அப்யாசந் தேவைப்படுகிற தென்று சிந்திக்கப் படுகிறது.

3 3 1

## சூ. ஆத்மேதி தூபகச்சந்தி க்ராஹயந்திச 4—I—3

3 3

ஆத்மேதிது உபகச்சந்தி, க்ராஹயந்திச என்று பிரிக்கவும்

ப, உ. ஆத்மா இதி = ஆத்மாவை (பரமேசுவரனை வழி படவேண்டும்) து = எதனாலோவெனின்? உபகச்சந்தி = அவ்வாறு கொள்ளப்பட்டிருக்கிறது. ச = மேலும். க்ராஹயந்தி = (சுருதி) ஆத்மாவை ஈஸ்வரவடிவமாகக் கூறுகின்றது.

வி. உ. நூல்களில் இன்ன இன்ன விசேஷணங்களோடு கூடியவன் இறைவன் என்று இயம்பி இருக்கின்றது. அவனை நமது வடிவ மென்று எண்ணவா அல்லது நமக்கு அன்னிய மென்று எண்ணவா என்று இங்கு விசாரிக்கப் படுகிறது.

தத்வ ஞானத்திற்காக நான்பிரஹ்மம் என்று தியானஞ் செய்ய வேண்டுமா, அல்லது நான்ஜீவன் எனது சுவாமி ஈஸ்வரன் என்று தியானம் பண்ணு வதா என்பது ஐயம். பேதமாகவும் அபேதமாகவும் அருளி இருக்கின்றன. ஆகையால் சந்தேகம் உண்டாகின்றது. ஜீவனுக்கும் ஈசனுக்கும் அபேதம் உண்டான பின்புதான் ஆத்மா என்னுஞ் சொல்லுக்கு முக்கிய பொருள் கொள்ள வேண்டும். அது வரை ஆத்மாவிற்கு கௌணப் பொருள்தான் கொள்ள வேண்டும் என்பது பிரதிவாதி மதம். அவன் தருந் தருக்கம்.

ஜீவன் பாவமுதலிய தோஷங்களோடு கூடியவன், ஈசன் அவையின்றியவன். ''அபஹதபாப்மா'' என்று மறை

மொழிகின்றது. அங்஡னம் இருக்க ஆத்மா வென்னுஞ் சொல்லால், இறைவன் என்று எவ்வாறு உரைக்க முடியும். மேலும் ஜீவனை ஈசன் என்று சொல்லும் பட்சத்தில் இவனோடு இணைந்த பரமனும் சம்சாரி யெனப்படுவன். அவ்வாறு ஏற்றுக் கொள்வோமானால் இறைவனை அசம்சாரி யென்னுஞ் சுருதிப் பயனற்றுப் போகும். இதுவரை பூர்வ பட்சம். இனி சித்தாந்தபட்சம் — இவ்வாத்மாவைப் பரம னென்று பகரவேண்டும். ஏனெனின், இறைவன் என்னும் அதிகரணத்தில் "த்வம்வா அஹமஸ்மி" என்றும், பகவோ தேவதே; அஹம்வை த்வமசி" என்றும் கூறியிருக்கிறது. இ-ள். ஏதேவதே! நீ. நானாக இருக்கிறாய் என்றும், எதேவதே! நான் நீயாயிருக்கிறேன் என்றும் ஜாபாலரிஷி சொல்லியிருக்கிறார். இதனால் ஜீவன் ஈசன் என்பதில் என்ன ஐயமிருக்கிறது? இன்னும் "அயம் ஆத்மா பிரஹ்ம" இந்த ஆத்மா பிரஹ்மம் என்றும், சுருதியில் ஒற்றுமை உரைத்-திருக்கிறது. ஆதலின் சந்தேகம் ஏன் கொள்ள வேண்டும், வேண்டுவதில்லை.

ஜீவ பிரஹ்ம ஐக்கியத்தை பிரதீக உபாசனை யென்று பேசப்படாது. ஏனெனின்? உபாசனையில் ஒருமுறை ஓதி-யிருக்கிறது. "ஆதித்யோ பிரஹ்ம" ஆதித்யன் பிரஹ்மம் "மநோ பிரஹ்ம" மனம் பிரஹ்மம் என்று ஒரு தடவை உரைத்திருக்கிறது. ஜீவனை பிரஹமம் என்னும் இடத்தில் இருமுறை இசைத்திருக்கிறது. நீ நான், நான் நீ யென் கின்றது. எனவே ஈண்டு பிரதீக உபாசனையன்று. ஆகை யால் அபேதம் சித்திக்கின்றது. இவண் பேததிருஷ்டி விலக்கப்படுகிறது. இவண் — இங்கு. எவன் ஒருவன் "அந்யோ அஹம் அந்யோ அசௌ" என்று வழிபடு-கின்றானோ அவன் விலங்குக்கு ஒப்பானவன் என்றும் மறை களில் பேதத்தை நிந்தித்திருக்கிறது. நான் வேறு பரமாத்மா

வேறு என்பவன் இழிவையடைகிறுன் என்பது மேலே சொல்லிய சுருதியின் பொருள். எவன் ஒருவன் இந்த் அத்வைத தத்துவத்தில் பேதத்தைப் பார்க்கிறுனே அவன் எமனேயடைகிருன் என்றுங் கூறுகிறது. இம்மாதிரி அநேக் மறைகள் பேத தரிசனம் பிறவிக்குக் காரணமென்று பேசு கின்றன.

ஜீவனும் ஈசனும் மாறுபட்ட சுபாவமுடையவரா தலால் இருவரும் ஒருவரென்பது எவ்வாறு பொருந்தும் என்ருயே, அது பொருந்தும். எங்ஙனம் எனின்? மாறுபட்ட குணத்தில் மித்யாத்வம் இருக்கிறது. மித்யாத்வம் — பொய் யென்னுந் தன்மை. மேலும் இறைவனுக்கு அபாவம் உண்டாகும் என்ருயே, அதுவும் பொருந்தாது. எதனுலே வெனின், பேதம் அறியாமையால் வந்தது, அபேதம் சாஸ்திரப் பிரமாணம்.

தத்வ ஞானம் வருவதற்கு முன் ஜீவனுக்கு சம்சாரி என்னும் விவகாரமும் பிரத்யட்சாதி விவகாரங்களும் பொருந் தும் ஆனுல் பரமார்த்தத்தில் எல்லாம் பிரஹ்ம சொரூப மென்று உணர்ந்த பிறகு மேலே சொல்லிய விவகாரம்



பொருந்தமாட்டாது. "அத்ர பிதா அபிதா பவதி" தத்வ நிலையில் தந்தை தாய் எல்லாம் ஆத்ம வடிவமாகிவிடுகிருர் கள்.

"வேதா அவேதா:" ஞானநிலையில் எல்லாம் இன்மையாகி விடுகின்றன. அந்நிலையில் சுருதிகளுக்கும் அபாவம் உண்டாகின்றது. பசியில்லாத போது அன்னமும், இருள் இல்லாதபோது ஒளியும், நோயில்லாத போது மருந்தும் எவ்வாறு தேவையில்லேயோ அவ்வாறு ஆத்ம ஞானம் வந்தபின் குரு, சாஸ்திரம் இவைகளுக்குத் தேவை இல்லே.

பிரதிவாதி — அங்ஙனமாயின் இவ்வக்ஞானம் யாருக்கு வாதி — உனக்குத்தான். எனக்கல்ல. நான் ஈஸ்வரன் "அக்ஞானம் எனக்கில்லையே" என்றபடி. எனவே ஆத்மா என்றாலும் ஈஸ்வரன் என்றாலும் ஒன்றேதாம். ஆகையால் ஆத்ம ரூப பிரஹ்மத்தின் கண் மனதை வைக்க வேண்டும். சூ. 3.

4
3 பிரதீக அதிகரணம். சூ 4

அ—கை.

எவ்வாறு முந்திய அதிகரணத்தில் பிரஹ்மத்தில் ஜீவன் ஒன்று பட்டு இருக்கிறான்; ஆகையால் அஹங்க்ரக உபாசனை சொல்லப்பட்டது. அவ்வாறு பிரதீக உபாசனையும் விசாரம் பண்ணும் போது ஜீவன் பிரஹ்மத்திற்கு அபின்னமாக இருப்பதால் பிரதீக உபாசனையும் அஹங்க்ரஹ உபாசனை என்று சொல்லலாமே யென்பது பூர்வபட்சம். அதை கண்டிக்கும் நிமித்தம் சூத்திரம் :-

1
**சூ. ந பிரதீகே நஹி ச: 4—1—4**

ப. உ. பிரதீகே = பிரதீக (உபாசனையில்) ந = ஆத்ம புத்தி வைக்கக் கூடாது. ஏனெனின், ச: = அஹங்க்ரஹ ஆத்மாவாகாது.

வி. உ. "மநோ பிரஹ்மேதியுபாசீத என்பது அத்யாத்மம்
2 4 3
அத அதிதைவதம் ஆகாசோ பிரஹ்மேதி" (சா. உ.)
3—18—1

இ—ள்.

மநோ பிரஹ்மேதி = மனதை பிரஹ்மமென்று உபாசீத = வழிபடவேண்டும். இது — அத்யாத்மம்.

என்னும் திருஷ்டி. ஆகாஸ: ப்ரஹ்ம = ஆகாசம் ப்ரஹ்மம் என்று வழிபட வேண்டும் என்பது அதி தெய்வ திருஷ்டி. தெய்வத்தைப் பற்றியது என்பது பொருள். ''ச நோ நாம ப்ரஹ்ம இதி உபாஸ்தே'' (சா. உ.) 7—1—5) அவன் நாமத்தைப் பெயரை ப்ரஹ்மம் என்று வழிபடுகிறுன் என்ற மறைகள் மொழிவதால் சந்தேஹம் உண்டாகிறது. என்ன சந்தேகம்? ப்ரதீக உபாசனையிலும் அது ஆத்மா வென்று கொள்ள வேண்டுமா அல்லது வேண்டாமா என்பது சந்தேகம். அங்ஙனமாயின் உனது எண்ணம் யாது? ப்ரதி வாதி — ப்ரதீக உபாசனையிலும் ஆத்மாவை ஒப்புக் கொள்ள வேண்டும். ஏனெனின்? சுருதிகளில் ப்ரஹ்மம் ஆத்மா வென்று சொல்லியிருக்கிறது. ப்ரதீகமும் ப்ரஹ்மத்தின் விகாரமாகும். ப்ரதீகம் — மனம், ஆதித்யன் இன்னும் பிறவும். விகாரம் — காரியம். எனவே அவைகளை ஆத்மா வென்று சொல்வதில் குற்றம் ஒன்றுமில்லை.

வாதி — அவ்வாறு கூறுவாயாகில், அது சரியல்ல. ப்ரதீக பொருளை ஆத்மா வென்று அறையலாகாது. ஏனெனின், வெளிப்படையான பொருள்களை ஆத்மாவாக கருதினுல் ஆத்மா அநித்யமாகும். மனதில் ஆத்மபுத்தி வைக்கலாம், ஆத்மாவில் மனபுத்தி வைக்கக் கூடாது. எல்லாம் ப்ரஹ்மத்தின் விகாரமானதால் எல்லாவற்றிலும் ப்ரஹ்ம புத்தி வைக்கலாம் என்பது சரியல்ல. ப்ரதீகத்திற்கு அபாவமுண்டாகும். ஏனெனின், காரிய வடிவ ப்ரதீகத்திற்கு அழிவு நேர்ந்த பின் நாம ரூப முதலிய கூட்டங்கள் ப்ரஹ்ம ரூபமாகி விடுகின்றன. நாம ரூபங்கள் நாசமான பின்பு அதில் ப்ரதீக உபாசனை, ஆத்மாவை ஒப்புக் கொள்ளுதல் இவை யெவ்வாறு பொருந்தும்?

ப்ரஹ்மம் ஆத்மாவாக ஆன பிறகு ப்ரஹ்மத்தை உபதேசஞ் செய்யும் போது ஆத்மாவை கல்பனை பண்ண

வேண்டுவதில்லை. என்வே பிரதீக உபாசனை வேறு. அகங்க்ரக உபாசனை வேறு. கர்த்தா, போக்தா ஞாதா என்னும் ஜீவ விவகாரம் எதுவரையிருக்குமோ அதுவரை அகங்க்ரக உபாசனை வேறு பிரதீக உபாசனை வேறு. தங்கத்தால் இரு நகை செய்யப்பட்டது. நகை வடிவத்தில் வேருக இருப்பினும் தங்கத் தன்மையால் ஒன்ருக இருப்பதால் இருநகைக்கும் இன்மையிருக்கிறது. அது போல பிரதீக உபாசனையில் ஆத்ம புத்தி வைக்கலாகாது. சூ. 4

4 பிரஹ்ம திருஷ்டி அதிகரணம். சூ. 5

*அ—கை*

முந்திய அதிகரணத்தில் மனம், ஆதித்யன் நாம முதலியவைகளை ஆத்மாவென்று கொள்ளக் கூடாதென்று கூறியிருக்கிறது. இந்த அதிகாரத்தில் எங்கே ஆத்ம திருஷ்டி வைக்கவேண்டுமென்று விசாரிக்கப்படுகிறது. சூத்திரம்

3

## சூ. பிரஹ்ம திருஷ்டி உத்கர்ஷாத் 4—1—5

பிரஹ்ம திருஷ்டி : உத்கர்ஷாத் என்று பிரிக்கவும்.

ப.உ. பிரஹ்ம திருஷ்டி := (மனதிலும், சூரியனிடத்திலும் ஆகாசத்திலும்) பிரஹ்ம புத்தி வைக்க வேண்டும். உத்கர்ஷாத் = ஆத்ம புத்தி சிறந்ததாக இருப்பதால்

வி.உ. ஆத்மாவில் ஆதித்ய மதியை வைக்கவா அல்லது ஆதித்யனிடத்தில் ஆத்ம புத்தியை வைக்கவா என்பது விசாரம். ஏனெனின்? ஆத்மாவும் ஆதித்தனும் ஒரு வேற்றுமையில் வந்தபடியால், இரண்டும் ஒரு வேற்று

மையில் வந்திருப்பதால் எது காரணம் எது காரியம் என்று புரியவில்லை.

சூரியனும் ஆன்மாவும் உண்மையில் வேருகாது. எங்ஙனம் பசு வேறு குதிரை வேரே. அவ்வாறு இங்கு பேதம் கூடாது. ஏனெனின்? எல்லாம் பிரஹ்மத்தின் விகாரம். பின்னை யெவ்வாறு பேதமெனின்? மண்ணுங் குடமும் போல என அறிக.

இவ்வாறு ஆதவனும் ஆன்மாவும் இயல்பாக விகார மானதால் பிரகிருதிபாவத்திற்கு அழிவுண்டாகும். மீண்டும் பிரதீக உபாசனை பொருந்தாது. அங்ஙனமாயின் 'ஆதித்ய பிரஹ்ம' என்னும் வாக்கியம் பரமாத்மாவை குறிக்கும். பரமாத்மாவை குறிக்கும் போதும் உபாசனை நிலைத்திருக் காது. அளவோடு கூடிய உபாசனையினால் என்ன பயன்? ஒன்றுமில்லை. ஆகையால் பிராஹ்மணோ அக்னிர் வைஸ் வானர:'' பிராஹ்மணன் வைஸ்வானரஅக்னி யென்பது வாக்கியத்தின் பொருள்.

இம்மாதிரி விசாரிக்கும்பொழுது ஒன்றில் மற்றொன்றை அத்யாசம் எவ்வாறு செய்வது என்பது பிரச்னை.

எப்பொழுது ஒரு தெய்வத்தை வழிபடுவதற்கு சாத னங்கள் கிடைக்காத பட்சத்தில் எது லகுவாக இருக்குமோ அதில் அந்தத் தேவதையை வழிபட வேண்டுமென்பது முறை. தேவதையை ஆத்மாவென்று வழிபடுவதால் ஒரு பயனும் இன்று. ஆகையால் பிரஹ்ம சொரூபத்தை யெதுவரை சாதகன் உள்ளவாறு உணர இயலவில்லையோ அதுவரை பிரதீகில் பிரஹ்மபுத்தியை வைத்து வழிபடலாம். எங்ஙனம் சாளிக் கிராமத்தில் விஷ்ணு புத்தியும் சிவலிங்கத்

தில் சிவபுத்தியும் வைத்து வழிபடுகிறார்களோ அது போலறிக. பொறிகளுக்குப் புலனாகின்ற சூரியன், சந்திரன், மனம், ஆகாசம் இவைகளில் பிரஹ்ம புத்தி வைத்து வழி பாடு செய்யலாம். ஏனெனின் எல்லாப் பொருளைப் பார்க் கிலும் பிரஹ்மப் பொருள் சர்வசிரேஷ்டம்: — மேன்மை யானது. மேலும் தாழ்மையான பொருளில் மேன்மையான பொருளை வழிபட வேண்டும் என்பது கருத்து. மேன்மை யான பொருளில் தாழ்மையான பொருளை வைத்து வழிபடக் கூடாது.

இவ்வாறு பிரதீக உபாசனையை தனது உபாசனை யென்று பரமாத்மா எண்ணுகிறார். வழிபாட்டிற்குரியப் பயனைத் தருவதும் பரம் பொருள் தான். இது "பலம்த உபபத்தே:", என்று சூத்திர உரையில் உரைத்திருக் கிறது. ஆண்டு கண்டு கொள்க. சூ. 5

5 ஆதித்யாதி மத்யதி[4] கரணம். சூ. 6

அ—கை

முந்திய அதிகரணத்தில் கீழ்மையான பொருளையும் மேன்மையாகக் கருதி வழிபடவேண்டுமென்று சொல்லியிருக் கிறது. ஆதித்யன் முதலிய பொருள்களிலும், உத்கீத வித்தைகளிலும் எவ்வித திருஷ்டியை வைக்க வேண்டுமென் பது இங்கு உரைக்கப் படுகிறது. சூத்திரம் வருமாறு :-

**சூ. ஆதி[3]த்யாதி மத[3]யஸ்ச அங்க உப பத்[3]தே: 4—I—6**

ஆதித்யாதி மதய[1]; ச, அங்கே உப பத்[3]தே: என்று பிரிக்கவும்.

ப.உ. அங்கே = உத்கீத முதலிய கர்மத்தின் அங்கங்களில் ஆதித்யாதி மதய: = ஆதித்தியன் முதலிய புத்தியைச் சொல்ல வேண்டும். உப பத்தே: ச = (ஏனென்னின்? அவ்வாறு செய்து வந்தால்) கருமத்திற்கு நிறைந்த பலன் உப பத்தே: = கிடைக்கும்.

3

வி.உ. ''ய ஏவ அசௌ தபதி தம் உத்கீதம் உபாசீத''

சா.உ. (1—3—1) ய ஏவ அசௌ = எந்த சூரியன் தபதி = சுடுகிருனே. உத்கீதம் உபாசீத = அந்த சூரிய வடிவமாக வழிபடவேண்டும். மேலும் பூமி முதலிய பொருள்களில் ஐந்து விதமாக சர்மபக்தி செய்ய வேண்டும் என்றும், வாக்கில் ஏழு விதமான சாம உபாசனை செய்ய வேண்டுமென்றும், இந்த பூமிக்கு ரிக்கு வேதம் என்றும், அக்கினி சாமவேதமென்றும், கூறப்பட்ட உறுப்புக்களிலும் சம்பந்தப்பட்ட விஷயத்திலும் ஐயம் உண்டாகிறது. என்ன ஐயம்? ஆதித்யனிடத்தில் உத்கீத புத்தியை வைப்பதா அல்லது உத்கீதத்தில் ஆதித்ய புத்தியை வைப்பதா என்பது ஐயம். பூர்வபக்ஷி — அதில் நியமம் இல்லாததால் சந்தேகம் உண்டாகிறது. இங்கு பிரஹ்மத்தைப் போல எதையும் உயர்வென்று சொல்லவில்லை. பிரஹ்மம் எல்லா உலகிற்கும் காரணம். மேலும் பாவமுதலிய குற்றத்திலிருந்து விலகியது. சிறந்த குணங்களோடு கூடியது. அதனுல் பிரஹ்மம், சூரியன் சந்திரன் இவர்களைப் பார்க்கிலும் சிறந்தது. இது— ஆன்மா, உத்கீதரூப ஆதித்யன், சந்திரன் முதலிய பிரதீக்குகள் கரும ரூபம். எனவே அவைகளை ஆன்மா என்பது நன்றன்று.

பூமி ரிக்கு வடிவம், அக்னி சாம வடிவம். இவ்வாக்கியத்தில் அக்னி வடிவ சாமம் பூமி யென்கின்ற ரிக்கு

மேல் நிலைத்திருக்கிறது. இம்மாதிரி சுருதி ரிக்கு என்னும் சொல்லால் பூமியையும், சாமம் என்னுஞ் சொல்லால் நெருப்பையும் உணர்த்துகின்றது. வித்தை வினையின் பயனை மிகுதியாக்குவதற்கு நிமித்தமாக இருக்கிறது. ஆகையால் அங்கமில்லாத ஆதித்யன் என்னும் புத்தியால் உத்கீதம் உபாஸ்யம் — வழிபடவேண்டும். ஆகையால் கீழ்மையான வஸ்துவில் மேன்மையான பொருளைப் பார்க்க வேண்டும்சூ-6.

## 6, ஆசீன அதிகரணம்.

அ—கை

இந்த அதிகரணத்தில் இது விசாரிக்கப்படுகிறது. எது? அதிகாரிகளுக்கு ஆசனத்தில் அமர்ந்து உபாசனை செய்ய வேண்டுமா அல்லது நடந்து, திரிந்து எழுந்து செய்ய வேண்டுமா என்பது பிரச்னை. தன் அநிமித்தம் சூத்திரம்.

4

## சூ. ஆசீந : சம்பவாத் சூ — 4—1—7

ப.உ. ஆசீநः = இருந்து (உபாசனை செய்யவேண்டும். சம்பவாத் = ஏனெனின், இம்மாதிரிதான் செய்வது தான் முறைமையாகும்.

வி.உ. கரும அங்கத்தோடு சம்பந்தப்பட்ட உபாசனை கருமத்திற்கு அதீனமாகும். அதீனம் — பரதந்திரமாகும். அங்கு ஆசனத்தைப் பற்றி விசாரிக்கப்படவில்லை. ஏனெனின், ஞானம் வஸ்துவிற்கு அதீனம். ஆனல் தியானம் இருந்து செய்வதா அல்லது படுத்துக் கொண்டே செய்வதா என்பது தெரியவில்லை. தியானம் மனத்தின் தொழில். ஆதலின் இருந்து செய்ய வேண்டும் என்பது இல்லையென்று பூர்வ பட்சிப் புகலுகின்ருன்.

சித்தாந்தி — தியானம் இருந்து செய்வதுதான் சிறப்பு, எங்ஙனம் எனின்? அதைக் கூறுவோம் — ஒரே மாதிரி விருத்தியைக் கொண்டு வருவதுதான் தியானம், அவ்விருத்தி நடப்பவருக்கும் ஓடுபவர்க்கும் உண்டாகாது. நடப்பன, ஓடுவன இவையெல்லாம் சித்தத்தில் விட்சேபத்தை யுண்டு பண்ணும். நின்று கொண்டும் தியானஞ் செய்யலாகாது. ஏனெனின், நின்று தியானஞ் செய்யும் போது உடம்பில் உள்ள பாரம் மனதில் வந்து பொருந்தும். மனம் பாரத்தைத் தாங்கும் பொழுது நுண்ணிய பொருளைத் திண்ணமாக நினைக்க முடியாது. அதன் வலி குன்றிப் போகும். கிடந்து தியானஞ் செய்யும் போது திடீரென நித்திரை வந்து மனதைக் கவர்ந்து கொள்ளும். உறக்கத்தால் ஈர்க்கப் பட்ட மனம் இறைவனை நாட எங்ஙனம் முடியும், முடியாதென்பது பொருள். சொல்வீரனும் சொல்லுகின்றான் வில்வீரனுக்கு —

1
''சுசௌதேசே பிரதிஷ்ட்டாப்ய ஸ்த்திரமாசனம் ஆத்மந:'' கீ. அ. 6, அருஜுனா! தூய்மையான இடத்தில் தனது ஆசனத்தைப் போட்டு அதில் இருந்து கொண்டு உறுதியாக ஆத்மாவை தியானஞ் செய்ய வேண்டும் என்று புருஷோத்தமன் சொல்லுகின்றான். புருஷோத்தமன் — கிருஷ்ணன். இதனாலும் தியானம் ஆசனத்தில் அமர்ந்து செய்ய வேண்டுமென்பது குறிப்பு. சூ. 7

அ—கை.

இக்கருத்தை நிலை நிறுத்தும் பொருட்டு மறு சூத்திரம்.

4
## சூ. த்யாநாச்ச. 4—1—8

ப.உ. உபாசனை, தியான வடிவமானதால் இருந்து செய்வதுதான் நல்லது.

வி.உ. தியானம் = வேற்று விருத்திகளை விலக்கி விட்டு பரமாத்மா விருத்தியைப் பெருக்கி அவன் பக்கமாக ஓடப் பண்ணுவதுதான் தியானம். த்ய — ஒரு பகுதி மனதை யுருக்கச் செய்து பரமன் பால் கவியச் செய்வது தான் அதற்குப் பொருள். மேலும் எண்ணெய், பால், நெய், தேன் இவைகளைப் போல சித்தத்தை யுருக்கி சிவன் பால் விழப் பண்ணுவது விருத்தி யென்று விளம்புவார்கள். இது சலனமில்லாத அங்கத்தை யுடையவனிடமும், பொறி களையடக்கியவர்களிடமும், மனதை ஒருமைப் படுத்தின வரிடமும் காணப்படுகின்றது. எவ்வாறு கொக்கு தியானம் பண்ணுகின்றது, அன்னிய நாடு சென்ற அன்பனை மற்றொரு அன்பன் நினைக்கின்றான் என்றபடி. இருந்து தியானஞ் செய்கின்ற போது ஆயாசம் அகன்று விடுகிறது. இதனால் தியானம் இருந்து செய்பவனுடைய வினையென்பது இனிது புலனும். ''உபவிஸ்ய ஆசநே யுஞ்ஜ்யாத்'' கீதை. ஆசனத்திலிருந்து அரிய தியானத்தை உரிய நேரத்தில் செய்ய வேண்டுமென்பது துணிபு. சூ. 8

அ—ண்க.

உரைத்த விஷயத்தை மீண்டும் உள்ளத்தில் உறை யும் பொருட்டு சூத்திரம் வருமாறு :-

**சூ. அசலத்வம்[1] ச அபேக்ஷ்ய[1] 4—1—9**

அசலத்வம் ச, அபேட்ச்ய, என்று பிரிக்கவும்.

ப.உ. அசலத்வம்ச = நிலை குலையாது தியானிக்க வேண்டும்.

வி.உ. ''த்யாயதீவ பிருதிவீ'' பூமி யெங்ஙனம் ஆடாது அசையாது தியானம் பண்ணுவது போல என்ற

படி. பூமி தியானம் பண்ணுவதில்லை, ஆனாலும் அசையாதத் தன்மையை விரும்பி அவ்வாறு அருளியது. இருந்து தியானம் செய்ய வேண்டும் என்பதற்கு இது லிங்கமாகும். லிங்கம் — குறி. பூமியைப் போல, கொக்கைப் போல, சித்திரத் தீபம் போல தியானஞ் செய்ய வேண்டும் என்பது அறிஞர்கள் அருளுரை.

இதற்கொரு இதிகாசம் — ஆரியன் இராமன் ஆருயிர்த் துணைவியைத் தேடி அருமைத் தம்பியோடு மதங்க வனத்தைக் கடந்து சபரி குடிலையை நோக்கிச் செல்கின்றான். வழியில் பம்பை யென்னும் பாவன தடாகம் எதிரே காண நேர்ந்தது. அத்தடாகம் கமலப் பூக்களால் கமலக் கண்ணனைக் கவர்ந்தது. வேளை பிராதம் முகூர்த்தம். அருணன் உதயமாயினன். அந்நேரம் அத்தடாகத்தின் நடுவில் ஒரு தாமரையிலை மேல் ஒரு கொக்கு ஒரு காலைத் தூக்கி கண்ணை மூடிக் கொண்டு நின்றது. தாசரதிப் பார்த்தான். தம்பியை நோக்கி — தம்பி! பார்த்தாயா இக் கொக்கை. குளிர் மிகுந்த இவ் வேளையில் இரு கண்களை மூடிக் கொண்டு இறைவனை தியானிக்கின்றது. என்ற கௌசலேந்திரன் மொழியைக் கேட்ட இளையவன் வியப்புற்று தனது ஆருயிர் அண்ணனை எண்ணி நெஞ்சம் உருகினான். கள்ளமில்லாத இப்புண்ணிய சீலன் கொக்கையும் தியானம் பண்ணுவதாகக் கூறுகின்றானே. இந்தக் கள்ளக் கொக்கு மெள்ள மீனைப் பிடிப்பதற்கு நிற்கின்றது; இதை எண்ணிப் பாராமல் இப் புண்ணியன் திண்ணமாகத் தியானம் பண்ணு வதாகச் சொல்லுகின்றானே யென்று ஏங்கி நின்றான். அவ் வேளையில் அக்கொக்கின் காலடியிலிருந்து ஒரு மீன் துள்ளி ஆரியன் முந்நிலை வந்து சிலவற்றைச் சொல்லியது. அதன் அருமையை அடியிற்காண்க — முன்னே சொன்னது இராமன், பின்னே சொன்னது மீன் — பஸ்யலக்ஷ்மண!

3 4 1
பம்பாயாம் பக : பரம தார்மிக : | சஹவாசி ஜானீயாத் சரித்ரம் சஹவாசிநாம் l l.

இ—ள்.

அருமை தம்பி! பம்பையென்னுந் தடாகத்தைப் பார். இந்தக் கொக்கு இக்குளிரையும் பொருள் படுத்தாமல் தருமச் சிந்தனேயோடு இறைவனை நினைக்கின்றது என்ருன் இராமன். இதற்கு விடையாக மீன் உரைத்தது. இராம! கூட வாழ்கின்றவர் சரித்திரத்தை — நிலைமைகளை சகவாசி— மீன்களாகிய நாங்கள், அறிவோம். எங்கள் குலத்தை நாசஞ் செய்யும் பொருட்டு இக்கொக்குக் கண்ணை மூடிக் கொண்டிருக்கிறதென்பது குறிப்பு. கொக்கைப் போல தியானஞ் செய்ய வேண்டும் என்பது சாரம். சூ. 9,

அ—கை.

இருந்து தியானம் பண்ண வேண்டும் என்பதை ஸ்மிருதிப் பிரமாண மூலமாக உணர்த்துகின்ருர். சூத்திரம்.

1
## சூ. ஸ்மரந்தி ச 4—I—10

ப.உ. கீதையின் வாயிலாகவும் இருந்து உபாசனை செய்ய வேண்டும்.

3 4 1
வி.உ. சமம்காயசிரோக்ரீவம் தாரயன் அசலம் ஸ்த்திர :

3 3
சம்ப்ரேட்ச்ய நாசிகாக்ரம் ஸ்வம்திசஸ்ச அநவ

1
லோகயன்

இ—ள்

(தியானம் பண்ணும் பொழுது) காயம் = உடலையும், சிரம் = தலையையும், கிரீவம் = கழுத்தையும், சமம் = தாரயன் (மூன்றையும்) நேராக வைத்துக் கொண்டு. அசலம் = அசையாமல் ஸ்த்திர: = நிலை பெற்று. திசஸ்ச = மற்றைய திசைகளை அநவலோக்யன் = பாராமல். ஸ்வம் நாசிகாக்ரம் = தனது மூக்கு நுனியை. சம்ப்ரேட்சய = நன்ருக நோக்கிக் கொண்டு. அடுத்த ஸ்லோகம் வருமாறு—

3 4
ப்ரசாந்தாத்மா விகத பீர் பிரஹ்மசாரி வ்ரதே ஸ்த்தித : |

மந : சம்யம்யமச்சித்தோ யுக்த ஆசீத மத்பர: ||

இ — ள்.

பிரசாந்தாத்மா = அமைதியோடு கூடியவனுகவும், 3
விகதபீ: = அச்சத்திலிருந்து அகன்றவனுகவும், பிரஹ்ம சாரி வ்ரதேஸ்த்தித: = பிரஹ்மசரிய விரதத்தில் நிலைத் திருப்பவனுகவும், மன: சம்யம்ய = மனதை அடக்கியவனுக வும், மச்சித்த: = சித்தத்தை என்னிடத்தில் வைத்தவனுக வும், யுக்த: = யோகத்தில் நிலைத்தவனுகவும், என்னிடத்தில் மிகுந்த வேட்கையுடையவனுகவும், ஆசீத = இருந்து தியானம் பண்ண வேண்டும் என்று திருமால் செப்புகின்ருர். இதனுலும் தியானம் இருந்து செய்ய வேண்டும் என்பது பொருள். சூ. 10,

3
(7) ஏக்காக்ரதா அதிகரணம் சூ. 11

அ—கை.

இதுவரை இருந்து தியானம் செய்ய வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது. இனி எந்த இடத்தில் இருந்து

தியானஞ் செய்ய வேண்டும் என்பதை அறிவிக்கும் பொருட்டு சூத்திரம் :-

**சூ. யத்ரைகாக்ரதா தத்ராவி சேஷாத் 4—I—II**

யத்ர, ஏக்காக்ரதா, தத்ர, அவிசேஷாத் என்று பிரிக்கவும்.

ப.உ. யத்ர = எந்த இடத்தில், (அல்லது) எந்தக் காலத்தில் ஏக்காக்ரதா = மனம் ஒருமைப் படுகிறதோ. தத்ர = அந்த இடத்தில் தியானம் பண்ண வேண்டும். அவிசேஷாத் = (ஏனெனின், சுருதிகளில்) இடத்தைப் பற்றிக் குறிப்பிடவில்லை.

வி.உ. தியானம் பண்ணுவதற்குக் காலம், நேரம், இடம் இவைகளுக்கு நியமம் உண்டா இல்லையா என்று கேள்வி. வைதிகக்காரியங்களுக்கு நியமங்கள் விதிக்கப் பெற்றிருக்கின்றன. அதுபோல் இங்கும் நியமம் உண்டா இல்லையா என்பது சந்தேகம். இங்கு அந்நியமம் இல்லை. பின்னை, எந்த இடத்தில், எந்தக் காலத்தில் மனம் இயல் பாக ஒடுங்குகின்றதோ அந்தக் காலத்தில் தியானம் பழக வேண்டும். எந்த இடத்தில் மனம் ஒடுங்குமோ அந்த இடத்தில் தியானம் பழக வேண்டும். அவிசேஷாத் = விசேஷமாக இடத்தைக் குறிப்பிடவில்லை.

கிழக்கு முகமாக தியானஞ் செய்யணும், காலையில் செய்யணும், இந்த இடத்திலிருந்து செய்யணும் என்றெல் லாம் நூல்களில் இயம்பவில்லை. எங்கிருந்தாவது மனம் இறக்கப் பழக வேண்டும். "மனம் இறக்கக் கல்லாற்கு வாயேன் பராபரமே" பொருள் வெளி. தாயுமானுர்.

சில சுருதிகள் — தியானம் பண்ணுபவர்களுக்குத் தரை சமமாக இருக்க வேண்டும், பவித்ரம், சிறிய கற்கள் இல்லாமலும், அக்னி, மணல் இன்றியும், மக்கள் ஓசையில்லாமலும், அருவி முதலிய நீர்வீழ்ச்சியில்லாமலும், ஜன சமுதாயம் இன்றியதாயும், மனத்திற்கு அனுகூலமாயும், உள்ள இடத்தில் தியானம் பழக வேண்டுமென்று சொல்லுகின்றன. மேலும் கொசு, இரைச்சல், ஈ எறும்பு, மூட்டைப்-பூச்சி இல்லாத இடம், குகை, ஏகாந்தம், அதிகக் காற்று இல்லாத இடம் தியானத்திற்கு உகந்தது. இவ்வாறு சில நியமங்களை நூல்கள் இயம்பியிருக்கின்றன. இங்ஙனம் நியமம் விதித்த போதினும் "மநோனு கூலே" என்னும் வாக்கியம் — அநுகூலம் எங்கேயிருக்கிறதோ அங்கு தியானஞ் செய்யலாம் என்பதை மிக வலியுறுத்துகின்றது. இதனால் நியமம் இல்லை யென்பது பொருள். சூ. 11

### 8) ஆப்ராயணாத் அதிகரணம் சூ. 11

அ—கை.

முந்திய அதிகாரத்தில் மனதிற்குப் பிடித்த இடத்தில் தியானம் பழகலாமென்று உரைக்கப் பெற்றது. இனி யெவ்வளவு காலம்வரை செய்ய வேண்டும் என்பதை யுணர்த்தும் பொருட்டு சூத்திரம் :-

## சூ. ஆப்ராயணாத் தத்ராபி ஹி திருஷ்டம் 4—1—12

ஆ, ப்ராயணாத், தத்ர, அபி, ஹி, திருஷ்டம் என்று பிரிக்கவும்.

ப.உ. ஆப்ராயணாத் = மரணம் வரை. (தியானம் பழக வேண்டும்.) ஹி = ஏனென்றால். தத்ராபி = மரண காலத்திலும். திருஷ்டம்: = அவ்வாறு காணப்படுகிறது.

வி.உ. தியானம் நிரந்தரம் நேயத்தோடு செய்ய வேண்டும். தியானம் ஞானத்தின் நிமித்தமாகும். தத்வ ஞானம் உதயமாகும்வரை தியானஞ் செய்ய வேண்டும். உமிகளையும் வரை நெல்லு குத்த வேண்டும் என்பது போல. பிரதிவாதி — சில காலம் வரை தியானம் பண்ணி விட்டு விட்டுவிட வேண்டும், ஏனெனின், ஆவிருத்தி வெகு காலம் செய்ய இயலாது. வாதி — அது முறையன்று, ஏனெனின், ஞானம் சிலகாலத்திலும் வரலாம், ஜன்மத்தின் இறுதியிலும் வரலாம். ஆகையால் மரணம்வரை தியானம் பழக வேண்டும் ''ஸ்தித்வா அஸ்யாம் அந்த காலே அபி'' கீதை. அந்த காலே அபி = மரண காலத்திலுங் கூட. ஸ்தித்வா = ஞான நிலையை அடைந்து, என்னை அடைகிறார்கள் என அச்சுதன் அருளுகின்றான். ''யச் சித்தஸ்தேநைஷ பிராணம் ஆயாதி'' மரணகாலத்தில் எந்த நினைப்போடு இருக்கிறானோ, அந்த எண்ணத்தோடு தானும் பொறிகளோடு பிராண விருத்தியை அடைகிறான். அந்தப் பிராணன் உதானனோடு கலந்து இவனை நினைத்த உலகத் திற்குக் கொண்டுபோய் விடுகிறது. என்னும் சுருதி வாக்கியங்களாலும் நீரில் கிடக்கும் அட்டை திருஷ்டாந்தத் தாலும் தெளிவாகின்றது.

''ச யாவத் க்ருது'' ஜீவன் எவ்வாறு எண்ணுகிறானோ அவ்வாறு உடலைப் பெற்று கருமாநுசாரந் திரிகிறான் என்று ஆம்நாயம் அறைகிறது. ஆம்நாயம் — வேதம். ''ஸ்மரந்திச'' சூத்திரம். ஸ்மரணம் ஸ்மிருதி. யம்யம் வாபி
4
ஸ்மரன் பாவம்.

த்யஜத்யந்தே கலேவரம் | தம்தமேவைதி கௌந்தேய சதாதத்பாவ பாவித : || கீ-8-6) கௌந்தேய = கூர்மை-யான மதியுடைய அருஜுந! (எவன் ஒருவன்) அந்த காலே = மரணத்தில் யம் யம் பாவம் = எந்த எந்த

எண்ணங்களை யெண்ணிக் கொண்டு கலேவரம் த்யஜதி = சரீரத்தை விடுகிருனே. தம் தம் ஏதி = அந்த அந்த
3 4
தேகத்தையடைகிருன். சதா தத் பாவ பாவித: = அதையே யெண்ணிக் கொண்டு அதையடைகிருன் என்பது அரியின் கருத்து. அரி — கிருஷ்ணன். இதனுலும் மரண வேளை யிலும் இறைவன் எண்ணம் இருக்க வேண்டும் என்பது பொருள். சூ. 12,

### 19) தத் அதிகம அதிகரணம் சூ. 13

அ—கை.

மூன்ருவது அத்யாயத்தின் மிஞ்சிய பாகம் முடிந்து விட்டது. இப்பொழுது ஈண்டு பிரஹ்ம வித்தையின் பயனைப் பற்றி விசாரிக்கப்படுகிறது — சூத்திரம் -

4 3 4
**சூ. தத் அதிகம உத்தர பூர்வ அகயோர் அஸ்லேஷ**
3
**விநாஸௌ தத் வ்யபதேசாத் 4 — 1 — 13**

தத், அதிகமே, உத்தரபூர்வ அகயோ : அஸ்லேஷ விநாஸௌ, தத் வ்யபதேசாத் என்று பிரிக்கவும்.

ப.உ. தத் அதிகமே = தத்வ ஞானம் வந்த பிறகு. உத்தர பூர்வ அகயோ : = முன்னும் பின்னும் உள்ள பாவங்கள். அஸ்லேஷ விநாசௌ = பற்றுதத் தன்மையும் நாசமும் ஆம். வ்யபதேசாத் = (ஏனெனின்) சுருதியில் கூறியிருப்பதால்.

வி.உ. முந்திய அதிகாரத்தில் உபாசகன் ஆயுள் உள்ளளவும் உபாசனை செய்ய வேண்டுமென்று உரைக்கப் பட்டிருக்கிறது. இந்த அதிகாரத்தில் ஞானிக்கு முன்னும் பின்னும் செய்த செய்கின்ற வினையின் விளைவுகள் பற்றுகிற தில்லை யென்று பகரப்படுகிறது. பிரதிவாதி — தத்வ

ஞானம் வந்த பின்பு அவனது பாவம் அழிகிறதா அல்லது அழிகிறதில்லையா என்பது கேள்வி. உனக்கு எவ்வாறு தெரிகிறதெனின், எந்தக் கருமமும் பயனைத்தராமல் அழிகிறதில்லை. பலனைத் தருகின்ற சக்தி யழிகின்றதில்லையென்று சுருதி யொப்புக் கொண்டிருக்கிறது. வினை விளைவுகளைத் தராமல் அழிந்து போகுமானால் பயனைக் கூறுகின்ற மறைகள் பயனற்றுப் போகும். ''நஹி கர்ம க்ஷீயதே'' என்பது ஸ்மிருதி. கருமம் பலனைக் கொடாமல் மாயாது என்பது பொருள். அங்ஙனமாயின் பிராயச்சித்தம் பயனற்றுப் போகும் என்பாயாகில், அது சரியல்ல. பிராயச்சித்தம் நிமித்தத்தால் வருவதைப் போக்குமே யொழிய மற்றைய வற்றை அகற்றாது. ஆகையால்

தத்வ ஞானம் வினைகளை யகற்ற முடியாது. மேலும் கருமத்தின் பயனை அநுபவித்து தீர்ப்பதால் மேற்கூறிய ஞானத்தால் முக்தியும் உண்டாக மாட்டாது. இது வரை பூர்வபட்சம். வாதி—நீ கூறுவது நெறியல்ல. ''தத் அதிகமே'' தத்வ ஞானம் வந்தபின் முன் இயற்றிய பாவத்தின் நாசமும், பின்னுள்ள பாவத்தின் பற்றாமையும் உண்டாகின்றன. இது எங்ஙனம் தெரிகிறது? சாஸ்த்திரப் பிரமாணத்தால். சாத்திரம் என்ன சொல்லுகின்றது? சாஸ்த்திரம் —

2

''யதா புஷ்கர பலாஸ ஆபோ ந ஸ்லிஷ்யந்த ஏவம் ஏவ விதி பாபம் கர்ம ந ஸ்லிஷ்யதே'' (சா.உ.) (4—14—3) இ-ள். யதா = எவ்வாறு. புஷ்கர பலாஸே = தாமரையிலையில். ஆபோ = தண்ணீர். நஸ்லிஷ்யந்தே = பற்றுகிறதில்லையோ. ஏவம் ஏவ = அம்மாதிரி. விதி = ஞானியை. பாபம் கர்ம = பாவ வினைகள். நஸ்லிஷ்யதே = பற்ற மாட்டா என்பது சுருதிப் பொருள். அனலில் அழுக்குப் பற்றாதது போல். நான் ஆன்மாவாக இருக்கிறேன் என்ற திடஞானியை தீவினைகள் சேரமாட்டா என்பது உறுதி.

இது ஞானியின் வருங்கால வினையின் பயன் வந்து பொருந்த மாட்டாதென்பதை யுணர்த்துகின்றது.

இம் மாதிரி ஞானியின் முன் செய்த பழவினையும் ஞானத் தீயால் எரிந்து சாம்பலாகின்றது என்பதற்கு 2 சாத்திரம். ''யதா இஷீகாதூலம் அக்னௌ'' அக்னியில் விழுந்த இலவம் பஞ்சு எரிந்து சாம்பலாவது போல ஞானம் என்னும் நெருப்பில் விழுந்த தீவினைகள் எல்லாம் எரிந்து மடிந்து போகின்றன என்பது பொருள்.

பர அபரவடிவ ஆன்மாவை அறிந்த பிறகு இதயத்தில் உள்ள (கிரந்திகள்) முடிச்சுக்கள் அனைத்தும் அற்றுப் போகின்றன, எல்லா ஐயமும் அகன்று விடுகின்றன, ஞானியின் கருமம் நசித்துப் போகின்றன என்று அன்னிய ஆரணங்களும் அருளுகின்றன. ஆரணம் — வேதம்.

கருமத்தில் பலனைக் கொடுக்கும் சக்தியிருப்பது போல் ஞானத்தில் அதைக் கொல்லும் வலிமை இருக்கிறது. கருமம் போகத்திற்காக, ஞானம் அக்ஞானத்தையும் அதன் காரிய உலகத்தையும் அகற்றும். ''ஞானத் தழல் சுட்டு வெண்ணீராக்கும்'' என்று கைவல்யத்திலும் காண்க. நிற்குண வித்தையில் ஆத்மா அகர்தாவென்று அறைந்திருக்கிறது. இதனால் ஞானம் கருமத்தை யெரிக்கும் என்பது திண்ணம்.

''அஸ்லேஷ:- என்னுஞ் சொல் ஞானி கர்த்தாவாக ஆகிறதில்லை யென்று அறிவிக்கிறது. ஞானிக்கு கருமம் உலக ஒப்பனைக்காக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அக்கருமம் ஞானம் வந்ததும் நெருப்பில் விழுந்த நீர் எவ்வாறு மறைந்து போகுமோ அதுபோல் அழிந்து போகும் என்பது பொருள்.

முன்னர் நிலை பெற்ற நான் செய்கிறேன் என்னுந் தன்மையும், நான் புசிக்கிறேன் என்னுந் தன்மையும், இதன் காரணத்தால் விபரீதம் — மாறுபட்ட தன்மையும் உடைய உலகம் ஆன்மாவாகிய என்னிடத்தில் முக்காலத்திலும் இல்லவேயில்லை யென்று ஞானி யெண்ணுகிறான். முன்னும் செய்தவனும் புசித்தவனும் நானல்லன் பின்னும் நானல்லன் என்று நினைப்பதால் அவனை அக்கருமங்கள் அணுகா. இந்த எண்ணமே அவனுக்கு முக்தியை நல்கின்றது.

இதற்கு மாறாக ஞானம் கருமத்தை விலக்க இயலாது என்று சொன்னால் முக்திக் கிட்டமாட்டாது. அங்ஙனமாயின் ஞானம் பயனற்றதாகும். எனவே தத்வ ஞானத்தால் கருமத்தின் நீக்கமும் முக்தியின் ஆக்கமும் உண்டாகிறதென்பது புலனும். சூ. 13

10 இதர அஸம்ஸ்லேஷ அதிகரணம் சூ 14

அ—கை.

முந்திய அதிகாரத்தில் ஞானத்தின் வலிமையால் பழவினையின் நாசமும், பாவத்தின் பற்றாதத் தன்மையும் பகரப்பட்டிருக்கின்றன. இவ்வதிகாரத்தில் புண்ணியத்தைப் பற்றி விசாரணை செய்யப்படுகிறது.

**சூ. இதரஸ்யாபி யேவம் அஸம்ஸ்லேஷ: பாதேது 4—1—14**

இதரஸ்ய, அபி, ஏவம், அஸம்ஸ்லேஷ:, பாதேது, என்று பிரிக்கவும்.

ப.உ. இதரஸ்யாபி = ஞானியினுடைய புண்ணியமும். ஏவம் = பாவத்தைப் போல. அஸம்ஸ்லேஷ: = பற்றமாட்டாது, ஆனல் அழிந்து போகும். பாதேது =

காயம் விழுந்த பின்னர். கைவல்யம் கிட்டுகிறது. கைவல்யம் — முக்தி.

வி.உ. ஞானியின் பாவம் அழிந்து போகட்டும், புண்ணியம் அறத்தால் வருகிறது. அறம் சாத்திரத்தால் உண்டாகிறது. அவ்வாறு இருக்க, அதற்கு அழிவு எங்ஙனம் உண்டாகும் என்பது பிரதிவாதியின் கேள்வி. உண்டானல் என்ன என்பது வாதியின் கேள்வி. பிரதிவாதி — ஞானமும் சாஸ்த்ரஜன்யம், புண்ணியமும் ஸாஸ்த்ரஜன்யம். இரண்டிற்கும் அவிரோதம் இருப்பதால் ஞானம் புண்ணியத்தைப் போக்குவது எங்ஙனம் பொருந்தும்? ஜன்யம் — உண்டாவது.

வாதி — புண்ணியமும் பாவமும் அவித்தையின் காரியம். அதனுல் அவையிரண்டும் பந்தனத்திற்குக் காரணம ஆம். கோந்தும் ஒட்டும், தேனும் ஒட்டும். அது போல புண்ணிய பாவம் இரண்டும் ஜீவனைக் கட்டும். தங்க விலங்கும் விலங்குதான், இரும்பு விலங்கும் விலங்குதான். எனவே யிரண்டையும் விட வேண்டுமென்பது வேதாந்தத்தின் முடிவு. பகைவனைப் பார்க்கிலும் உறவன்தான் மிகுதியான துன்பத்தைக் கொடுப்பான்.

பாவம் மனிதனை நரகத்தில் தள்ளுகின்றது, அதில் விழுந்தவன் இதிலிருந்து எப்போது கரையேறுவோம் என்று ஏங்கித் தவிக்கிருன். பிறகு வைராக்கியத்தை நாடுகிருன் ஆனல் புண்ணியம் அவ்வாறன்று. என்னகாரணம் என்பாயாகில், அது — புண்ணியம் சுவர்க்கத்தை அடைவிக்கிறது. அங்கு சென்றவன் மீளாத இன்பத்தில் மூழ்கியிருக்கின்ருன். இன்பத்தின் வேட்கையால் இறைநிலையை அறவே மறந்து விடுகிருன். ஆகையால் பாவத்தைப் பார்க்கிலும் புண்ணியமே துன்பத்திற்கு மிககாரணம். அதனுல் அதுவும் பற்றுகிறதில்லை. அழிந்தும் போகிறது.

சுருதி — ‘‘உபே[4] ஏவ ஏஷ ஏதே தரதி‘‘ பிரு. உ. (4-4-22) உபே ஏதே = புண்ணிய பாவம் இரண்டையும், ஏஷ = இந்த ஞானி, தரதி = வெல்லுகிருன். ஏவ — அசை. அல்லது ஏவ = உறுதியை உணர்த்த வந்த சொல். இம்மறை மொழியால் பாவத்தைப் போல புண்ணியமும் அழியும் என்று தெரிகிறது.

ஆத்மா அகர்த்தா. எனவே அது பாவத்தையும், புண்ணியத்தையுஞ் செய்கிறதில்லே. இவன் எந்தக் கருமத்தைச் செய்தாலும் அது அவனுக்குப் பயனையளிப்ப தில்லே. புண்ணியத்தின் பயன் இழிந்ததும் அழிந்ததும் ஆம், ஞானத்தின் பயன் வலிந்ததும் உயர்ந்ததும் ஆம். பாவத்தைத் தொடாதப் புண்ணியமில்லே. புண்ணிய வடிவ பகலும், பாவ வடிவ இரவும் இவ்வாத்மாவை தொடுகிற தில்லே என்று சுருதி சொல்லுகின்றது.

‘பாதேது‘ து என்னுஞ் சொல் உறுதியை உணர்த்து கின்றது. பாதே — ஞானியின் உடல் நழுவிய பிறகு முக்தி உறுதியாக உண்டாகிறது என்பது பொருள். ‘‘ஸ்மிரியதே’’ கேசவனும் கிளர்த்துகின்ருர்—கிளர்த்துதல் — சொல்லுதல்.

‘‘சர்வ[4]தருமான் பரித்யஜ்ய மாமேகம்[1] சரணம் வ்ரஜ‘‘

இ—ள்

சர்வதருமான் = தருமத்தையும், அதருமத்தையும். பரித்யஜ்ய = விட்டு விட்டு. மாம் ஏகம் = அத்வைத வடிவ என்னே. சரணம் வ்ரஜ = எனது சரணுகதியை அடை என்று வாசுதேவனும் வரைந்து தந்ததை யூகித்து உணர்க. இதனுலும் பாவபுண்ணியம் ஞானிக்கு இல்லேயென்பது இனிது புலனும். சூ. 14

3 4
## ''அநாரப்த அதிகரணம் சூ. 15

அ—கை.

சென்ற இரண்டு அதிகாரத்தில் ஞானத்தினால் பாவ புண்ணியம் இரண்டும் அழிந்து போகின்றன என்று மொழிந்திருக்கிறது. அங்ஙனமாயின் ஞானம் வந்த பிறகும் உடல் காணப்படுகிறதே அது எவ்வாறு பொருந்தும்? வினை தான் ஒழிந்தால் தினைப் போதளவும் நிலாது கண்டாய் என்ற வாக்கியம் பயனற்றுப் போகுமே யென்பதற்குப் பதில் சூத்திரம் —

3 4 1 3 4
**சூ. அநாரப்த காரியே ஏவது பூர்வே ததவதே :**
**4—1—15**

அநாரப்த, காரியே, ஏவ, து, பூர்வே, தத்அவதே: என்று பிரிக்கவும்.

ப.உ. அநாரப்தகாரியே ஏவ = பிராரப்த வினை நீங்கலாக. பூர்வே = சஞ்சித வினைகளை மட்டும். ஞானம் நாசம் பண்ணும். தத் அவதே: து = ஏனெனின், பிராரப்த கருமம் தேகம் விழும் வரையிருக்கும்.

வி.உ. முந்திய அதிகாரத்தில் பிராரப்தம் நீங்கலாக மற்றைய வினைகள் எல்லாம் ஞானத்தால் அழிந்து போகும்
1
என்று உரைத்திருக்கிறது. ''க்ஷீயந்தே ச அஸ்யகர்மாணி'' இச்சுருதி, ஞானிக்கு எல்லாக் கருமமும் அழிந்து போகின்றன என்றும், ''தஸ்யதாவதேவச்சிரம்'' என்னும் சுருதி, ஞானிக்கு பிராரப்த வினை எஞ்சி நிற்கிறதென்றும் சொல்லுகிறதே, ஆகையால் ஞானிக்குச் சில கருமம் எஞ்சி நிற்கிறதென்று தெரிகிறது.

இதைத் தெளிவுப் படுத்துவதற்காக அநாரப்தே யென்று தொடங்குகின்றார். ஆரப்தம் பிராரப்த வினையைக்

குறிக்கும். அநாரப்தம் என்னுஞ் சொல்லால் சஞ்சிதத்தையும், ஆகாமியத்தையுங் கொள்ள வேண்டும். எல்லாவினைகளும் அவித்தையிலிருந்து தான் எழுந்திருக்கின்றன. தத்வ ஞானம் அவித்தையைக் கொல்லும் போது பிராரப்த வினையையும் கொன்று இருக்க வேண்டும். ஆனால் இவ்வினைகள் எல்லாம் அவித்தையில் இருந்தன. பிராரப்தம் மட்டும் ஞானம் வருவதற்கு முன் வெளியேறிவிட்டது. அதனால் ஞானம், அவித்தையையும் அதில் இருந்த வினைகள் அனைத்தையும் கொன்று விட்டது. பிராரப்தம் வெளியேறியதால் அதைக் கொல்ல இயலவில்லை.

ஞானம் பிராரப்த வினையையும் கொன்று விடுமானால் உடனே உடல் விழுந்து விடும், அங்ஙனம் ஆயின் விதேக முக்தியும் உண்டாகி விடும். பிறகு சரீரம் எப்போது விழும் என்று எதிர் நோக்க வேண்டுவதில்லை. ஆனால் 'தாவதேவச் சிரம்' என்று மறை சொல்லுகின்றது. ஆகையால் அவ்வினை யழியவில்லை யென்பது உறுதி.

ஆன்ம ஞானம் வந்ததும் தேகம் விழுமானால் நான்முகன், வசிட்டர், யாக்ஞவல்க்கியர், வியாசர், சுகதேவர், உத்தாலகர், முதலிய ஜீவன் முக்தமகான்கள் இருந்திருக்க மாட்டார்கள். அவர்கள் இல்லாது போனால் நமக்கு இந்த ஞானம் கிடைத்திருக்க மாட்டாது. அவ்வாறு கொள்வோமானால் பரம்பரைக்குப் பங்கம் ஏற்படும். எனவே பிராரப்த வினையை விட்டு மற்றைய வினைகளை ஞானம் கொல்லும் என்பது துணிபு. சூ. 15

## 12) அக்னி ஹோத்ராதி அதிகரணம். 16

அ—கை.

முந்திய அதிகாரத்தில் புண்ணிய கருமத்தின் சம்பந்தம் ஞானிக்கு உண்டாவதில்லை யென்று மொழிந்திருக்கிறது.

இந்த அதிகாரத்தில் எல்லா புண்ணியமும் அற்று விடுகிறதா அல்லது சில மிஞ்சியிருக்கிறதா என்பதற்குப் பதில் சூத்திரம் :-

3

**சூ. அக்நி ஹோத்ராதி து தத்காரியாயைவதத் தர்ஸநாத் : 4—1—16**

அக்நி ஹோத்ராதி, து, தத், காரியாய, ஏவ தத், தர்ஸநாத் என்று பிரிக்கவும்.

ப.உ. அக்நி ஹோத்ராதி = யக்ஞ, தான தப முதலிய கருமங்கள். தத் காரியாய = ஞானமுண்டாவதற்கு துணை புரிகின்றன. தத் தர்ஸநாத் = (அவ்வாறு) சுருதியில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஏவ = உறுதி. து — என்னுஞ் சொல் அய்யத்தை அகற்றுகின்றது.

வி.உ. ஹோமம் முதலிய நித்யகர்மம், நைமித்திக கருமம் இவையெல்லாம் அதன் அதன் காரியத்திற்காக. ஞானத்திற்கு எது காரியமோ அது யக்ஞயாக தபத்திற்கும் காரியமாகும். எங்ஙனந் தெரிகிறது என்பாயாகில், "தமே தம் வேதாநுவசநேந . . ." பிரு — உ (4—4—22) அந்தணன் ஆத்மாவை அறிவதற்கு ஆசைப்படுகிறான். எதன் மூலமாக? யக்ஞத்தினாலும், தானத்தினாலும், தபசினாலும் ஆன்மாவையறிய அவாவு கொள்கிறான் என்பது குறிப்பு.

ஞானமும் கருமமும் வெவ்வேறு காரியங்களை உடையவைகள். அங்ஙனமிருக்க, இரண்டும் ஒரு காரியத்தையுடையவை யென்பது எவ்வாறு பொருந்தும் என்பாயாகில், அதனால் குற்றம் ஒன்றுமில்லை எங்ஙனம் எனின், காய்ச்சல் உள்ளவனுக்கு தயிரும், மரணத்திற்கு நிமித்தமான நஞ்சும் வேறு வேறாக இருப்பினும் வெல்லமும், மந்திரமும் கலந்து சேர்ந்த பின் திருப்தியையும், ஆரோக்கியத்தையும் அளிப்பது போல, கருமம் ஞானத்தோடு கலந்து சித்த

சுத்தியின் வாயிலாக முக்திக்கு நிமித்தமாகின்றது. அங்ஙன மாயின் முக்தி ஞானத்தினடைவு, அது கருமத்தின் அடைவு எப்படிப் பொருந்தும்? இதனாலும் குற்றம் ஒன்றுமில்லை. கருமம் ஞானத்திற்குத் தூரத்தில் இருந்து உபகாரம் பண்ணுகின்றது; பரம்பரையாக முக்திக்கும் உதவுகின்றது. அக்காரணத்தினால் கருமமும் வீடடைவதற்குச் சாதன மென்று சாற்றப்பட்டிருக்கிறது.

அதுவும் "விவிதிஷா" என்ற அடை மொழியால் ஆன்மாவை யறிய விரும்பும் அவர்க்குச் செய்ய வேண்டும் என்பது பொருள். ஞானம் வருவதற்காக ஆசையை விட்டு நிஷ்க்காமமாகக் கருமத்தைச் செய்தால் சுத்தியுண்டாகும், சுத்தியுண்டானபின் சித்தி — (பாவ நிவிருத்தி) உண்டாகும், சித்தி உண்டான பிறகு பக்தியுண்டாகும், பக்தியுண்டான பின்பு முக்தியுண்டாகும் என்பது கருத்து.

ஞானி, ஞானம் வந்த பின்பு யாகஞ் செய்ய வேண் டும் என்பது பொருந்தாது. உலக நன்மைக்காக செய்ய விரும்பினால் அவனைத் தடுப்பார் யாருமிலர். மேலும் "யக்ஞோதானம் தபஸ்சைவ பாவநாநிமநீஷிணாம்" கீதை. அருஜுனா! யக்ஞம், தானம், தபசு, இவையெல்லாம் பாவ நாஸினி — பாவத்தைப் போக்குவதற்காக என்று யது நந்தனன் இயம்புகின்றான். இனிய மைத்துனர்க்கு இதனாலும் ஞானத்திற்கு கருமம் சாதனம் என்பது இனிது புலனாம். சூ. 16

அ—கை.

அங்ஙனமாயின் மேலே சொன்ன அஸ்லேஷம் — பற்றாதத் தன்மை, விநாசம் என்பது எதைக் குறிக்கும்?
3
இன்னும் — "தஸ்ய புத்ரா தாயம் உபயந்தி யென்ற வாக்கியமும் எதற்காக என்பதற்குப் பதில் சூத்திரம் —

**சூ. அதோ அங்யாபி ஹி ஏகேஷாம் உபயோ : 4—I—17**

(superscript numbers 1 and 4 printed above அதோ and ஏகேஷாம்)

அத :, அங்யா, அபி, ஹி; ஏகேஷாம், உபயோ : என்று பிரிக்கவும்.

ப.உ. ஏகேஷாம் = சில மதவாதிகள் மதத்தில். அத: = துறக்கத்திற்குரிய கருமம் வேறு. அந்நியா = அக்னி ஹோத்ராதி கருமம் வேறு. உபயோரபி = இம் முறை ஜைமினி, வியாசர் இருவருக்கும் சம்மதம். துறக்கம் — பொன்னுலகம்.

வி.உ. வேதத்தில் வருகின்ற கண்வ (சாகை) கிளையை ஓதுகின்றவர்கள் காண்வர் என்று பெயர் அவர் கள் மதத்தில் ''தஸ்ய புத்ரா தாயம் உபயந்தி'' சுகிருத: சாதுகிருத்யாம் துவிஷந்த: பாபகிருத்யாம்'' என்கின்றது சுருதி. பொ-ள்- தஸ்யபுத்ரா: = ஞானிகளது குழந்தைகள். தாயம் உபயந்தி = அவர் பொருளையடைகின்றனர். சுகிருத: = உறவினர் அல்லது அன்பர்கள். சாதுகிருத்யாம் = புண்ணியத்தை அடைகின்றனர். துவிஷந்த: பாபகிருத்தி யாம் = பகைவர் அல்லது பாவிகள் ஞானியின் பாவத்தைப் பெறுகிறார்கள் என்பது சுருதியின் பொருள். இதை — கைவல்யக் காரரும் கழறுகின்றனர். ''சிறியவர் இகழ்ந்து ஞானி செய்த பாவத்தைக் கொள்வார், அறிவுள்ளோரறிந்து பூசித்து அறமெலாங்கைக் கொள்வாரே'' கைவல்யம். ஈண்டு இதனை யூகித்து உணர்க. சூ. 17

(superscript 3 printed above ''தஸ்ய and தாயம்)

### 13 வித்தியா ஞான சாதன அதிகரணம். 18

அ—கை.

சமுச்சய ஞானம் சாஸ்த்ரத்தில் விதித்திருக்கிறதா? சமுச்சய ஞானமென்றால் என்ன? பதில் — ஒரு பறவை

மரத்திலிருந்து மற்றொரு மரத்திற்குப் பறக்க வேண்டுமானால் இரண்டு இறக்கை வேண்டும். புகை வண்டி ஒரு நிலையத்திலிருந்து மற்றொரு நிலையத்திற்குப் போக வேண்டுமானால் இரு தண்டவாளம் வேண்டும். அதுபோல பிரம்மத்தைப் பெறுவதற்கு ஞானமும் கருமமும் வேண்டும் என்பது சமுச்சயவாதம். சூத்திரம் —

### சூ. யதேவ[3] வித்யயேதி[3] ஹி 4—1—18

யத், ஏவ, வித்யயா, இதி, ஹி, என்று பிரிக்கவும்.

ப.உ. வித்யயா = ஞானத்தோடு கூடிய யத் = கருமம் இப்பிறவியில் முக்தியைப் பெறுவதற்குச் சாதனமாகும். ஏவஹி = ஏனெனின், ''யதேவ'' என்பது சுருதியின் வாக்கியம்.

வி.உ. அதிகாரி வாயிலாக முக்தியென்னும் பயனைப் பெறுவதற்கு நிஷ்காம கருமத்தோடு ஞானத்தை யடைய வேண்டும் என்று சென்ற அதிகாரத்தில் செப்பியிருக்கிறது. இவ்வதிகாரத்தில் கருமத்தோடு உபாசனை இணைந்திருக்கிறதா அல்லது தனியாக இருக்கிறதா என்று சிந்திக்கப் படுகிறது.

எதனாலோவெனின், ''ய எவம் வித்வான் யஜதி'' யாகத்தை நன்கு தெரிந்தவன் வேள்வியைச் செய்கிறான் என்பது மறையின் பொருள். ''ஜானன் சம்சனம் கரோதி'' அறிந்தவன் அரிய வேள்வியை உரிய நேரத்தில் செய்கிறான் என்பது இரண்டாவது மறையின் பொருள். அறிந்தவனும் அறியாதவனும் கருமத்தைச் செய்கிறான் என்றும், இயம்பி இருக்கிறது. இதனால் கருமமும் உபாசனையும் இணைந்து இருக்கிறதா பிணைந்திருக்கிறதா என்ற ஐயம் எழுகிறது.

மேலும் — ''தமேதம் ஆத்மானம் யக்ஞேநவிவி[3]திஷந்தி'' அப்படிப்பட்ட இந்த உபநிஷத்தால் அறியப்பட்ட

ஆத்மாவை வேள்வியால் அறிய அவாவு கொள்ளுங்கள் என்று மேலே சொல்லிய மறையில் உணர்த்தியிருக்கிறது. இது பொதுவாதலால் உபாசனை அங்கமாகிறது. இவை யிரண்டும் சேர்ந்துதான் தத்வஞானம் முக்திக்கு வித்தா கிறது என்பது பூர்வபட்சம். வித்து — காரணம். வெறும் கருமமும் அன்று வெறும் உபாசனையும் அன்று.

உபாசனையோடு கூடிய கருமம் சிறந்தது, தெய்வ வழிபாடு இல்லாத கருமம் இழிந்தது. இதுவரை பிரதிவாதி மதம். வாதி — நீ கூறியது மிகப் பொருத்தம். வித்வான் வேதியரை நோக்கும் போது வித்தை இல்லாத மறைய-வனைப் போல. ஆனாலும் உபாசனையில்லாத கருமத்தை முழுக்கத் தள்ளவும் முடியாது. ஏனெனின், வித்தையில்லாத நிஷ்காம கருமமும் ஞானவாயிலாக முக்திக்கு உபகாரஞ் செய்வதால் ஞானம் வரும் வரை அவஸ்யஞ் செய்ய வேண்டும் என்பது சாஸ்த்ர மரியாதை. 18,

இதரக்ஷபண அதிகரணம். சூ. 19

*அ—கை.*

ஞானியின் பிராரப்த கருமத்திற்கு நாசம் எவ்வாறு உண்டாகிறதென்பதற்குச் சூத்திரம் —

**சூ. போகேந ⁴ து ³ இதரே க்ஷபயித்வா சம்பத்யதே. ³**

**4—1—19**

போகேந, து, இதரே, க்ஷபயித்வா, சம்பத்யதே யென்று பிரிக்கவும்.

ப.உ. இதரேது = மற்றைய கருமங்களுக்கு வேறான பிராரப்த கருமம். போகேந = நுகர்ந்து. க்ஷபயித்வா = நாசம்பண்ணி. சம்பத்யதே = பிரஹ்மத்தையடைகிறான்.

வி.உ. சஞ்சிதகருமம், ஆகாமிகருமம், அவைகளுடைய பாவ புண்ணியங்கள் ஞானத்தின் வலிமையால் வெந்து நீருயின, பிராரப்த வினையென்ன ஆயிற்று என கேள்வி யெழுந்தது, அதற்குப் பதில் — ஞானி தனது ஆரப்த வினைப்பயனை அநுபவித்து தொலைக்கிருன். 'சம்பத்யதே' உடலை விட்ட பிறகு விதேக முக்தியை அடைகிருன் என்பது பொருள். ''தஸ்ய தாவதேவச் சிரம் யாவத் நவி மோக்ஷ்யே
2
அத சம்பத்ஸ்யே'' சா.உ. (6—14—2) இ—ள். யாவன் = எதுவரை. நமோட்ச்யே = இச்சரீரத்தை விடுவதில்லையோ. தாவத் ஏவச் சிரம் = அது வரை (விதேகமுக்தி) ந சம்பத்ஸ்யே = உண்டாகிறதில்லை யென்பது பொருள். ''பிரஹ்மைவசன் பிரஹ்மாப்யேதி'' இ—ள். ஆன்மாவாக இருந்து ஆன்மாவை யடைகிருன் என்றபடி.

தத்வ ஞானம் வந்த பின்பும் பேததர்சனம் — இரு சந்திரன், கானல் நீர் எங்ஙனம் தோன்றுகிறதோ அங்ஙனம் உடல் விழுந்த பிறகும் ஏன் தோன்றக் கூடாது எனின், அது முறையன்று. எங்ஙனம் எனின், பேத தர்சனத்திற்கு நிமித்தம் இன்மையால். வேறு கருமங்கள் வேறு போகத்தை யுண்டு பண்ணுமோவெனின், இல்லை, அதற்குரிய விதை யெரிந்து விட்டது. அதனுல் அந்த எண்ணத்திற்கே இட மில்லை.

பொய்யான ஞானத்தைப் பற்றி யெழுகின்ற வினை கள் மெய்யான தத்வ ஞானத்தால் அழிந்து போனதால் தேகம் விழுந்தபின் அந்நிய போகத்தை யுண்டு பண்ணும் வினை எங்ஙனம் இருக்கிறது. அஃது இன்மையால் போகம் எவ்வாறுண்டாகும்? உண்டாக மாட்டாது. ஞானிக்கு கைவல்ய முக்தி அவஸ்யம் உண்டாகும் என்பதில் சிறிதள வேனும் ஐயமில்லை. இதனுல் போகத்தை யளிக்கும் பிராரப்த வினை இன்ப துன்பத்தை யீந்து ஞானியை நுகரப்பண்ணி

அழிந்து போகின்றது என்பது உறுதி. 19, நான்காவது அத்யாயத்தின் முதற்பாதம் முற்றிற்று.

நான்காவது அத்யாயத்தின் இரண்டாவது பாதம்.

இந்தப் பாதத்தில். ஜீவனது உத்கிராந்தகதியைப் பற்றிச் சொல்லப்படுகிறது. உத்கிராந்தி. கதி — போக்கு வரவு என்பது பொருள்.

1. வாக்கு அதிகரணம். சூ. 1—2

அ—கை.

சென்ற பாதத்தில் ஞானியின் ஜீவன் முக்தி, விதேக முக்தியைப் பற்றிப் பேசப்பட்டது, இந்தப் பாதத்தில் சகுண வித்தையின் பயன் அயன் உலகத்தின் அடைவு. அயன் — நான்முகன். அது தேவையான மார்க்கமாக அடையப்படும் என்பது இங்கு உரைக்கப்படுகிறது. சூத்திரம் —

3 3 3

**சூ. வாங் மநசி தர்சநாத் சப்தாச்ச 4—2—1**

வாக், மநசி, தர்சநாத், சப்தாத், ச என்று பிரிக்கவும்.

ப.உ. வாக் = வாணியின் விருத்தி. மநசி = மனதில் ஒடுங்குகின்றது. தர்சனாத் = வாக் விருத்தி மனதில் ஒடுங்குவதாகக் காணப்படுகிறது.

வி.உ. மநோவிருத்தி நிலேத்திருக்கிற போது, அதில் வாக்கு விருத்தி அடங்கி விடுகிறது. இவண் விருத்தியும் விருத்தியுடையதும் ஒன்றுதான். வாக்கு மனதில் ஒடுங்குகிறதென்றல், விருத்தி யொடுங்குகிறது என்பதுதான் பொருள்.

உபாசனே செய்பவனுக்கும் செய்யாதவனுக்கும் கதி யொன்றுதான். கதி — போக்கு வரத்து, உத்கிராந்தி —

உடலை விட்டுப் பிரிவது. கதி—போவது. ஆகதி — வருவது. இது அஞ்ஞானிக்கும் அறிஞனுக்கும் சமானம்.

தர்சநாத்—''அஸ்ய சோம்ய புருஷஸ்ய ஹேசோம்ய!'' பிரிய குழந்தாய்! அஸ்ய புருஷஸ்ய = இந்த மரணத்தையடைந்த மனிதனுடைய. வாங் = வாக்கு. மநசி = மநோ விருத்தியில் லயம் ஆகுகின்றது. மனம் பிராணனிலும், பிராணன் அக்னியிலும், அக்னி பரதேவதையிலும் லயமாகின்றது என்று சுருதி சொல்லுகின்றது.

சா.உ. (6—8—6) இங்கு விருத்தியோடு கூடிய வாக்கு ஒடுங்குகிருதா அல்லது விருத்தி மட்டும் லயமாகிறதா என்பது சந்தேகம். பிரதிவாதி — வாக்கு மட்டும் மனதில் ஒடுங்குகிறது, இப்படி யொப்புக் கொண்டால்தான் மறைமொழி பொருத்தமாகும். இல்லை யெனின் லக்ஷணை யென்றுதான் கொள்ள வேண்டும். மறை மொழிக்கும் லக்ஷணைக்கும் ஐயம் எழுமானல் மறை மொழிக் கொள்ளற்பாலது. லக்ஷணைத் தள்ளற்பால்து. ஆகையால் வாக்கு மனதில் லயமாகிறது என்பது பிரதிவாதி மதம். சித்தாந்தி —

வாக்கல்ல, ஆனல் விருத்திதான் ஒடுங்குகிறது. அவ்வாறு சூத்திரஞ் சொல்லவில்லையே யென்பாயாகில், அது முறைதான் — ஆனலும் ''அவிபாகோ வசனத்'' என்று பின்னல் சொல்லப்படும். எனவே விருத்திதான் லயமாகிறதென்பது பொருள்.

மநோவிருத்தி நிலை பெற்று இருந்த பிறகு வாக்கு விருத்தி அடங்கும். மண்ணிலிருந்து குடம் உண்டாகிறது. ஆகையால் மண்ணில் அது அடங்கி விடுகின்றது. அது போல் விருத்தியிலிருந்து வாக்கு மனதிலிருந்து உண்டாகிறது என்பதில் பிரமாணமில்லை. ஆனல் மண்ணிலிருந்து உண்டானக் கட்டையிலிருந்து நெருப்பு உண்டாகிறது, பிறகு நீரில் அடங்கி விடுகிறது. இங்கு சுருதி சொன்னது —

விருத்தியையும் விருத்தியையுடைய வாக்கையும் ஒன்று சேர்த்து சொன்னது என்பது பொருள். 'சப்தாத்' என்னும் சொல் இதையுணர்த்துகின்றது சூ. 1

அ—கை.

வர்க்கு மனதில் லயமாகின்றது என்று சொன்ன பிறகு இந்திரியங்களைப் பற்றி எதையும் இயம்பக் காணோம், எனவே இந்திரியங்களைப் பற்றி யென்ன சொல்லப்படுகிற தென்பதற்கு சூத்திரம் —

## சூ. அத ஏவ ச சர்வாணி யநு. 4—2 – 2

அத:, ஏவ, ச, சர்வாணி, அநு, என்று பிரிக்கவும்.

ப.உ. அத ஏவ=நூல்களில் சொன்ன ஏதுக்களால் வாக்கைப் போல சர்வாணி யநு = எல்லாப் பொறிகளின் விருத்தியும், விருத்தி விசிட்ட மனதில் அடங்கி விடுகின்றன வென்று கொள்ள வேண்டும்.

வி.உ. "தஸ்மாத் உபசாந்ததேஜா: புநர்பவம் இந்திரியை: மநசி சம்பத்யமாநை:" பிரஸ்ந — உ. 3—2 தஸ்மாத் = ஆகையால். உபசாந்த தேஜா: = உடலில் உள்ள வலிமை குன்றிவிட்டது. தேஜ் = (உஷ்ணம்) மனசி = மனதில். அடங்கிய இந்திரியங்களோடு, மறுபிற வியை அடைகிறுன் என்று சுருதியில் உரைத்திருக்கிறது. இவ்வாக்கியத்தால் சகல இந்திரியங்களும் மனதில் அடங்கியதாகத் தெரிகிறது.

வாக்கு மனதில் அடங்குகின்றது என்றுல் எல்லா இந்திரியங் களும் மனதில் அடங்குகின்றன என்பதுதான் பொருள். அங்ஙனமாயின் வாக்கை மட்டுந் தனியாக ஏன் சொல்லுவானே யென்பாயாகில், உதாரணத்திற்காக என்று அறியவும். சூ. 2

2 மநோ அதிகரணம் சூ. 3

அ—கை.

அதன் பிறகு மநோநிலை யென்னவாயிற்று என்பதற்குச் சூத்திரம் —

**சூ. தத், மந: பிராண உத்தராத் 4—2—3**

தத், மந:, பிராணே, உத்தராத் என்று பிரிக்கவும்.

ப.உ. தத்=எல்லா இந்திரிய விருத்திகள் ஒடுங்கும் இடமான மநம். அதுவும், பிராணே=விருத்தி வாயிலாக பிராணனில் ஒடுங்குகின்றது. உத்தராத்=''மனப்பிராணே' என்னும் பின்னே வரும் வாக்கியத்தால் அறியப்படுகின்றது.

வி.உ. 'வாங்மநசி சம்பத்யதே' இச்சுருதியில் விருத்தியொடுங்குவதாகத் தெரிய வருகிறது. அதன் பிறகு வருகின்ற வாக்கியத்தால் மனம் பிராணனில் ஒடுங்குகின்றது என்று தெரிகிறது. இங்கும் மனம் அடங்குகிறதா அல்லது மனோ விருத்தியடங்குகிறதா என்பது கேள்வி. பிரதிவாதி— இவண் மனந்தாம் ஒடுங்குகிறது. எப்படித் தெரிகிறது? மறை மொழியால். பிராணன் மனதின் விருத்தியேயாகும். ''அந்நமயம் ஹிசோம்யமந:'' பிரிய மைந்தனே! இம்மனம் அன்னத்தின் காரியம். பிராணன் நீரின் காரியம் இவ்வாறு ஆரணம் அருளுகின்றது. மேலும் — ''ஆபஸ்ச அந்நம் அஸ்ருஜந்த'' தண்ணீர் தரையைப் படைத்தது. தரை—பூமி.

பிரகிருதி விக்கிருதி யிவை யிரண்டும் ஒன்று. ஆக மனம் ஜலத்தின் காரியமாகிய பிராணனில் ஒடுங்குகிறதென்பது பூர்வ பட்சம். வாதி — நீ நிகழ்த்துவது சரியல்ல, ஏனெனின், பொறிகளின் விருத்தியை தனக்குள் அடக்கும் மனம் தனது விருத்தியோடு பிராணனில் ஒடுங்குகின்றது என்பதுதான் பின் வருகிற வாக்கியம் உணர்த்துகின்றது. மேலும் உறக்கத்திலும், மூர்ச்சையிலும், சாகுந்தருவாயி

லும் உள்ள புருஷனது மூச்சுநிலை நின்ற பின் மனோவிருத்தி சாந்த நிலையை அடைகின்றது. இதனால் மனம் அடங்கிற தில்லை, மனதின் செயல்தான் அடங்குகின்றது. செயல் ஒடுங்கி விட்டது என்றாலே மனமும் அடங்கி விட்டது என்பது தான் பொருள். செயலும் செயலையுடையவனும் ஒன்று தானே. 3,

(3) அத்யட்ச அதிகரணம். சூ. —4—6

அ—கை.

மனோவிருத்தி பிராணனில் ஒடுங்கிய பிறகு என்ன ஆகிறது என்றதற்குச் சூத்திரம்—

**சூ. சோ[4] அத்யக்ஷே[3] தது[3] பகமாதிப்ய[4] : 4—2—4**

ச:, அத்யக்ஷே, தத், உபகமாதிப்ய: என்று பிரிக்கவும்.

ப.உ. ச: = அந்தப் பிராணன் செயலற்று, அத்யக்ஷே = ஜீவனிடத்தில் அடங்குகின்றது. எவ்வாறு தெரிகிறது எனின், தத்உபகம ஆதிப்ய: = ஜீவனை நோக்கி பிராணன் செல்லுகின்றது என்ற மறைமொழியால் தெரிகிறது. ஆதி பதத்தால் அநுகமனம்—ஜீவனோடு போக, அவனோடு வர என்ற வாக்கியம் அறிவிக்கின்றது.

வி.உ. எதிலிருந்து எது உண்டாகவில்லை அதில் அது அடங்குகிறதில்லை, அதன் விருத்திதான் ஒடுங்குகிற தென்பது தெளிவு. இப்பொழுது ''ப்ராணஸ் தேஜசி'' பிராணன் தேஜஸ் என்னும் தேவதையில் ஒடுங்குகின்றது என்பது பொருள். இம் மறைமொழியால் விசாரிக்கப் படு கிறது. என்ன விசாரம் — இந்தப் பிராணன் அக்கினியில் ஒடுங்குகிறதா அல்லது ஜீவனில் ஒடுங்குகிறதா என்று விசாரிக்கப்படுகிறது. பிரதிவாதி — பிராணன் அக்கினியில் அடங்குகின்றது. சுருதியும் அவ்வாறு மொழிகின்றது. அஸ்ருத கல்பனா அன்னியாயம் என்பது ஒரு நியாயம். பிரா ணன் அக்னியில் ஒடுங்குகின்றது என்று சுருதியில் சொல்லி

யிருக்க ஜீவனில் ஒடுங்குவது என்று சொல்வது முறையன்று.

வாதி—நீ உரைப்பது சரியல்ல. ஏனெனின் 'சோ அத்யக்ஷே' ஜீவனிடத்தில் தான் ஒடுங்குகின்றன. ஜீவ்ன் இவ்வுடல், உறுப்புக்கள் முதலியவைகளுக்குத் தலைவன்: அதனால் அவனுக்கு அத்யக்ஷன் என்று பெயர். இஜ்ஜீவன் பிராணவிருத்தியோடுக் கூடியவன். அதனால் அவனிடத்தில் பிராணன் ஒடுங்குவது இயல்பு. மேலும் பிராணனும் ஜீவன் எங்கு செல்கின்றானோ அவனைப் பின் தொடர்ந்து செல்கின்றது.

ஜீவன் சென்றபோது பிராணன் செல்கின்றான், பிராணன் செல்கின்றபோது எல்லாப் பொறிகளும் செல்லுகின்றன, என்ற வாக்கியங்களும் உணர்த்துகின்றன. இதனாலும் ஜீவனிடத்தில் பிராணன் அடங்குகின்றது என்று நன்கு தெரிகிறது. ஜீவனைத் தொடர்ந்து செல்வதுதான், உபகமம். பின்பற்றிச் செல்வது. இதனால் பிராண விருத்தி ஜீவனில் ஒடுங்கும் என்பதில் குற்றம் ஒன்றுமில்லை. 4,

அ—கை.

அங்ஙனமாயின் பிராணஸ்தேஜசி யென்பது எங்ஙனம் பொருந்தும் என்பதற்குச் சூத்திரம்—

சூ. பூதேஷு தத் சுருதே: 4—2—5

பூதேஷு, தத் சுருதே: என்று பிரிக்கவும்.

ப.உ. பூதேஷு = பிராணனோடு கூடிய ஜீவன் என்னும் அநிலன்—பிராணன் அக்னி யென்னும் சூக்கும பூதத்தோடு கலந்து இருக்கிறான். தத்சுருதே: = 'பிராணஸ்தேஜசி' என்னும் சுருதியால் தெரியவருகிறது.

வி.உ. பிராணன் நெருப்பில் அடங்குகிறான் என்றாலும் எல்லா சுருதிகளையும் விசாரிக்கும் போது தேஜு என்னும் முக்கியப் பொருளாகிய ஐம்பூதத் தலைவன் ஜீவனைக் கொள்ள வேண்டும். ஜீவனிடத்தில் தான் பிராண விருத்தி

லயம் ஆகின்றது. பிராணனுடன் கூடிய ஜீவாத்மா ஐம் பூதத்தோடுக் கூடியத் தேகத்திற்குக் காரணமான சூக்கும பூதத்தில் நிலேத்திருக்கிறதென்பது உறுதி. இந்தப்ராணனும் முன்னர் ஜீவனேடு கலந்து பின்னர் அக்கினியோடு கலந் திருக்கின்றது.

அத்யக்ஷே யென்னுஞ் சொல் இடையில் இருப்பதால் நெல்லேயிலிருந்து சென்னே செல்பவனும், கோவில்பட்டி யிலிருந்து சென்னே செல்பவனும் மதுரை வருவது போல இந்தப்ராணன் ஜீவனேடு கலந்து சகல பூதங்களிலும் கலந் திருக்கிறுன் என்பது கருத்து. 5,

அ—கை.

முந்திய மறையில் ஜீவனேடு கலந்து பூத சமுதாயத் தில் ஒடுங்காமல் நெருப்பில் ஒடுங்குகிறது என்று சொன்னல் என்னக் குற்றம் வரும் என்பதற்குச் சூத்திரம் —

1 3

**சூ. ந ஏகஸ்மின் தர்ஸயதோ ஹி 4—2—6**

ந, ஏகஸ்மின், தர்ஸயத:, ஹி என்று பிரிக்கவும்.

ப.உ. ஏகஸ்மின்= (ஜீவன் வெளியேறிப் போகும் போது) ஒரு நெருப்பில் மட்டும் நிலேத்திருக்கிறது என்பது ந=இல்லே. பின்னே, ஆக்கை ஐம்பூதத்தால் ஆக்கப் பட்ட தால் எல்லா பூதங்களிலும் இருக்கிறது என்பது பொருள். ஹி=ஏனெனின், தர்ஸயத:=சுருதியும் ஸ்மிருதியும் இவ் வர்த்தத்தைத் தெரிவிக்கின்றன.

வி.உ. வேறு உடலே யெடுக்க வேண்டு மென்று எண் ணும் போது ஜீவன் ஒரு ஒளியில் இருக்கிறதில்லே, ஏனெ னின், காரிய சரீரம் அனேக வடிவமென்று தெரிகிறது. "ஆப: புருஷ வசஸ:" ஆப:=சோமரசம், நெய், எண்ணெய் முதலியவைகள் மனித வடிவம் எவ்வாறு ஆகிறது என்னும் கேள்வியாலும் விடைகளாலும் தெரிகிறது. இதன் விரிவை "த்ரயாத்மகத்வாத்" என்னும் சூத்திர உரையில் காண்க.

சுருதியும் மற்றைய நூல்களும் இப் பொருளை நன்கு விளக்கு கின்றன. பிருதிவிமயம், அபோமயம், வாயுமயம், ஆகாசமயம், தேஜோ மயம் என்றெல்லாம் சுருதியும், மோட்சம் வரை அவிநாசி வடிவ சூக்கும பாகம் என்று எவ்வாறு சொல்லப்படுகிறதோ அதோடு எல்லாம் உண்டாகின்றன என்ற ஸ்மிருதிகளும் கூறுகின்றன என்பது பொருள்.

எனவே ஒருபூதம் என்ருலும் அதை மற்றைய பூதங்கள் கலந்ததென்றே கொள்ளவும். நீரென்று எடுத்துக் கொண்டால் அதில் சூக்கும நிலமும், சூக்கும நெருப்பும் கலந்து தான் இருக்கின்றன. ஆதலின் எந்த பூதத்தில் ஜீவன் இருந்தாலும் ஏனைய பூதங்கலந்த அந்த பூதத்தில் இருக்கிருன் என்று தான் பொருள். 6

4, ஆசிருதி உபக்கிரம அதிகரணம். சூ. 7

அ—கை.

மரணக் காலத்தில் கதி சொல்லப்பட்டிருக்கிறது, அது, பொதுவாக எல்லோருக்கும் சொல்லப்பட்டிருக்கிறதா அல்லது பிரஹ்ம லோகத்திற்குச் செல்லும் உபாசகருக்காகவா என்ற கேள்விக்கு விடை சூத்திரம் —

1

**சூ. சமாநாச ஆசிருதி உபக்ரமாத் அமிருதத் வஞ்ச அநுபோஷ்ய 4—2—7**

சமா நா, ச, ஆசிருதி, உபகிரமாத், அமிருதத்வம், ச, அநுபோஷ்ய என்று பிரிக்கவும்.

ப.உ. ஆசிருத்யுபகிரமாத்=தேவயான மார்க்கம் துவக்குவதற்கு முன் ஞானி அஞ்ஞானி யிருவருக்கும் (செல்லுந் வழி) பொது. ஏனெனின், 'வாங்மநசி' என்னும் சுருதி சமமாகக் கூறியிருக்கிறது. அமிருதத்வஞ்ச அநுபோஷ்ய= இங்கு அமிருதம் என்பது அயன் உலகத்தில் அநுபவிக்கப் பட்ட ஆனந்தத்தை. முக்தியானந்தமன்று.

வி.உ. இவ்வாறு உயிர் பிரியும் போது பொறிகள் மனதிலும், மனம் பிராணனிலும், பிராணன் ஜீவனிலும், ஜீவன் சூக்கும பூதங்களிலும் முறையாக அடங்குகின்றன என்று அருளப் பெற்றது. இதற்கு உத்க்ராந்தி யென்று உயிரின் நிலையை உணர்ந்தவர்கள் உரைப்பார்கள். இஃது எல்லோர்க்கும் சமானம். இதைக் குறிப்பதற்காக "சமா நாச்ச" என்று சூத்திரத்தில் சொன்னார்.

உயிர் பிரிந்து போவது விரிவான பூதங்களோடுதான் போகும். மீண்டு பிறக்கும் போதும் பூதங்களைப் பற்றிதான். ஆனால் ஞானிக்கு மறு பிறப்பு இல்லை. இவ்வாறிருக்க ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பொது என்பது எங்ஙனம் பொருந்தும் என்பது பிரதிவாதியின் கேள்வி. உன்மதம் என்னை யென்று வாதி வினவ, அஞ்ஞானிக்கு மட்டும் என்பது என் மதம். ஏனெனின், "வித்வான் அமிருதம் அஸ்நுதே" ஞானி முக்தியை அடைகிறான் என்பது சுருதியின் பொருள். எனவே அஞ்ஞானிக்கு உத்க்ராந்தி என்பது பிரதிவாதி வாதம்.

வாதி—தேவயான வழியாக பிரஹ்ம லோகம் போவதற்கு வழி பிறக்கும் வரை இருவருக்கும் கதி சமானம். அக்ஞானிகள் சூக்கும உடலோடு மீண்டும் இம்மேதினியை நோக்கி வருகிறார்கள், உபாசகர்கள் தேவயான வழியிலிருந்து அயன் உலகஞ் சென்று அங்குள்ள இன்பத்தை நுகர்ந்து அயனோடு கலந்து முக்தியைப் பெறுகிறார்கள். திரும்பி இங்கு வருகிறதில்லை.

உபாசகர்கள் முற்றிலும் அக்ஞானத்தை அகற்றாமல் அபர வித்தையை வழிபட்டு அதன் வலியால் சில காலம் நிலையுள்ள இன்பத்தை நுகர விரும்புகின்றனர். ஆகலின் அவர்களுக்கு தேவயான வழிக்கு வேறாக அயன் உலகத்திற்கு வாயில் திறக்கிறது. அவ்வழியாக அவர்கள் சூக்கும உடலோடு அங்கு செல்கின்றனர். அங்கு சிலகாலஞ் இருந்து முக்தியை அடைகிறார்கள். இதற்கு முறையான முக்தியென்று பெயர். சூ. 7

(5) சம்சார வியபதேச அதிகரணம். சூ. 8

அ—கை.

சகல கருவிகளோடு ஜீவன் தேஜஸ் என்கின்ற பர தேவதையில் அடங்குகிருன் என்று அறைந்திருக்கிறதே, அங்ஙனமாயின் எல்லா உயிர்களும் அடங்குகின்றனவா அல்லது விசேஷ உயிர்கள் மட்டும் அடங்குகின்றனவா என்பதற்குப் பதில் சூத்திரம்—

**சூ. தத் ஆபீதே: சம்சார வியபதேசாத் 4—2--8** [3]

தத், ஆபீதே:, சம்சார வியபதேசாத் என்று பிரிக்கவும்.

ப.உ. தத்=அந்த ஒளி ஆதி சூக்கும பூதம். ஆபீதே: =மோட்சம் வரையிருக்கிறது. சம்சாரவியபதேசாத்= (ஞானமில்லாத மக்களுக்கு) பிறவி யுண்டென்று சொல்லியிருப்பதால்.

வி.உ. ''தேஜ: பரஸ்ய தேவதாயாம்'' ஒளி பரதேவதையில் ஒடுங்குகின்றது என்பது சுருதியின் பொருள். ஆனல் அவ்வடைவு எவ்வாறு உண்டாகிறது என்பது இங்கு சிந்திக்கப்படுகிறது. பிரதிவாதி—எல்லாம் முற்றிலும் ஒடுங்கி விடுகின்றன என்று தெரிகிறது. பரதேவதை யென்பது தேஜஸுக்கு வடிவமாகலாம். தோன்றிய பொருள் அனைத்தும் பரதேவதையிலிருந்து உண்டாயிருக்கின்றன. எதிலிருந்து எது உண்டாகிறதோ அது அதுவேயாம். மண்ணிலிருந்து குடம் உண்டானல், உண்டான குடம் மண் வடிவமேயாகும். எனவே யெல்லாம் முற்றிலும் ஒடுங்குகின்றன. என்பது என் மதம். என்—பிரதிவ்ாதி.

இனிவாதி—இவ்வொளி முதலிய சூக்கும பூதங்கள் மோட்சம் வரை நிலைத்திருக்கின்றன. இது எங்ஙனந் தெரிகிறதெனின், ''யோநிம் அந்யே''. என்று சுருதி சொல்லுகின்றது. இ—ள். அஞ்ஞானிகள் தங்கள் வினை யநுசாரம்

பிறவியைப் பெறுவதற்கு வீரிய வாயிலாக உடலை யெடுத்து இழிந்த துன்பங்களை நுகருவது என்பது பொருள். இழிந்த பதத்தினால் மரஞ்செடி. கொடி, இவைகளாக வந்து பிறக்கிறார்கள். இதை ''சம்சார வியப தேசாத்'' என்னும் வாக்கியத்தால் தெரிந்து கொள்ளலாம். எனவே ஒடுக்கத்திலும், பீஜ அவஸ்த்தை எஞ்சி நிற்கிறது. அப்படி இல்லை யென்றால் சூக்கும பூதங்கள் முழுக்க ஒடுங்கிவிடுமானால் உபாதி இன்மையால் ஞானி அக்ஞானி அனைவரும் பிரஹ்மத்தில் ஒடுங்கி விடுவார்கள் என்று கொள்ள வேண்டும். அங்ஙனமாயின் விதிசாத்திரமும் வித்யாசாத்திரமும் பொருளற்றதாகும்.

அஞ்ஞானத்தினால் வந்த பந்தமானது விஞ்ஞானத்தினால் விலகுகின்ற தென்பது பொருந்தாது. ஆகையால் பரதேவதை தேஜ் என்னும் தேவதைக்கு காரணமாக இருப்பினும் உறக்கம் பிரளயம் இவை இரண்டிற்குச் சமான பீஜாவஸ்த்தை மிஞ்சி இருக்கிறதென்பது புலனும். 8,

அ—கை.

முந்திய அதிகாரத்தில் சம்சாரம் நீங்கும் வரை அவித்தையோடு கூடிய சூக்கும பூதமும் பரஒளியும் பரதேவதையில் ஒடுங்குகின்றன என்று உரைக்கப் பெற்றிருக்கிறது. இந்த அதிகாரத்தில் லிங்க வடிவ சூக்கும ஒளி நுண்ணிய நாடி வழியாக எப்படி செல்கிறது, போகும் மார்க்கத்தில் உருவப் பொருளோடு ஏன் முட்டவில்லை, உடலை விட்டு ஒருவும் போது ஏன் தெரியவில்லை யென்னும் வினாக்கள் எழுகின்றன. இதற்கு விடை சூத்திரம் —

**சூ. சூட்ச்மம் பிரமாணதஸ்ச ததா உபலப்தே :**
**4—2—9**

சூட்ச்மம், பிரமாணத:, ச, ததா, உபலப்தே: என்று பிரிக்கவும்.

ப.உ. மற்றைய பூதங்களோடு மேவிய ஒளி, பிரமாணத: =பிரமாணத்தினுல். ச=மேலும் சொருபமாகவே. சூட்ச்மம் =நுண்ணியது. ததா உபலப்தே:=இவ்வாறு உணரப்படு கிறது.

வி.உ. இந்த உடலில் இருந்து வெளியேறிய ஜீவன் அந்நிய பூதங்களோடு கலந்து அளவோடு சூட்ச்மம் ஆகி ன்றது. இவ்வுயிர் பிரிந்து நாடி வழியாக மேல் உலகத்தை மேவுகிறதாகச் சொல்லியிருக்கிறது. அதனுல் இவ்வுயிரும் மிக சூக்குமம் என்பது புலனும். ஆதலின் வடிவப் பொரு ளோடு மோதுவதற்குக் காரணம் இல்லை.

உயிர் நுணுக்கமானதால் பக்கத்தில் இருப்பவராலும் பார்க்க முடிகிறதில்லை. இதனுல் பக்கத்தில் இருப்பவரால் ஏன் பார்க்க முடியவில்லை என்பதற்குப் பதில் கிடைத்து விட்டது. 9

அ—கை.

வேறு வழியாகவும் அப்பொருளை விளக்கும் பொருட்டு சூத்திரம் :—

3

## சூ. நோபமர்தேந அத: 4—2—10

ந, உபமர்தேந, அத: என்று பிரிக்கவும்.

ப.உ. அத:=ஒளி, சூக்கும சரீரம் மிக சூக்குமமாக இருப்பதால். உபமர்தேந=ஸ்த்தூல உடம்போடு மோதின போதிலும். ந=உயிருக்கு மோசம் வருவதில்லை.

வி.உ. தூல உடம்பு நெருப்பு, தண்ணீர் முதலிய வைகளினால் அழிந்த போதிலும் சூக்கும உடல் அழிகிற தில்லை. அதுவே அழியாதிருக்கிற போது உயிர் எங்ஙனம் அழியும்? அழியாதென்பது கருத்து. 10

அ—கை.

மேலே சொன்ன விஷயத்தை மீண்டும் நிலை நிறுத் தும் பொருட்டு அடுத்த சூத்திரம் :—

1

**சூ. அஸ்யைவ ச உபபத்தேரேஷ ஊஷ்மா,**
**4—2—11**

அஸ்ய, ஏவ, ச, உபபத்தே:, ஏஷ, ஊஷ்மா என்று பிரிக்கவும்.

ப.உ. அஸ்யைவ=இந்த சூக்கும உடலுக்குத்தான் ஏஷ ஊஷ்மா=இக் கொதிப்பு. உபபத்தே:=ஸ்தூல தேகத்தைத் தொடும் போது தெரிகிறது.

வி.உ. ஊஷ்மா—உஷ்ணம்—கொதிப்பு. உயிரோடு கூடிய சூட்சம சரீரம் இருந்தால் தான் ஸ்த்தூல தேகத்தில் கொதிப்பு அறியப்படும். அல்லேயேல் இல்லே. இதனுல் உயிரும், சூக்கும உடலும் பிரிந்து போனுல் கொதிப்புக்கு மாருகக் குளிர்ச்சி வந்து ஸ்த்தூல தேகத்தில் பொருந்தும். ஆகையால் தூல உடலுக்கு வேருக சூக்கும உடல், சூக்கும உடலுக்கு வேருக உயிர் இருக்கிறதென்பது தெளிவு. ஆதலின் ஸ்த்தூல தேகத்தில் காணும் கொதிப்பு ஸ்த்தூல தேகத்திற்கன்று, பின்னே, சூக்கும தேகத்திற்காம். என்பது இனிது புலனும். 11,

6 பிரதிஷேத அதிகரணம். சூ. 12—14

*அ—கை.*

அஞ்ஞானம், அதன் காரிய துன்பம், விருப்பு வெறுப்பு முதலியக் குற்றங்களே மெய்ஞ்ஞானத்தால் போக்காது போனுல் மறைகளில் கூறும் மாயாத அமிருதத்தை மருவ இயலாது. மாயாத—அழியாத. மருவுதல்—பெறுதல் என்பதற்கு சூத்திரம் :—

4

**சூ பிரதி ஷேதாத் இதிச்சேந் ந சாரீராத்**
**4—2—12**

பிரதி ஷேதாத், இதி, சேத், ந, சாரீராத் என்று பிரிக்கவும்.

ப.உ. பிரதி ஷேதாத்=(ஞானிகளுக்குப் போக்குவரவு இல்லையென்று) விலக்கி யிருக்கிறது. இதிச் சேத்ந=அவ்வாறு சொல்வாயானல் அது பொருந்தாது. ஏனெனின், சாரீராத் இவ்விலக்கு ஜீவனுக்கு அறைந்ததே தவிர உடலுக்கு அல்ல. சகுண உபாசகர்க்கு உத்க்ராந்தி உண்டு. உத்க்ராந்தி—போக்கும் வரவும்.

வி.உ. ''ந தஸ்ய பிராண உத்க்ராமந்தி'' பிரு.உ (4-4-6) தத்வ ஞானியின் உயிர் பிரிந்து எங்கும் செல்கிறதில்லை என்பது மறையின் பொருள். அமுத நிலை யிரு வகைத்து. ஒன்று சாபேக்ஷிகம்—விருப்பத்தோடு கூடியது, மற்றொன்று நிரபேக்ஷிகம்—விருப்பமின்றியது. இது எவ்வாறு தெரிகிறதெனின், சில முனிவர்கள்—''தஸ்ய பிராண:, என்றும், சிலர் 'தஸ்மாத் பிராண:' என்றும் மொழிந்திருக்கிருர்கள். முன்னே மொழிந்தது ஆருவது வேற்றுமையும், பின்னே பேசியது ஐந்தாவது வேற்றுமையும் ஆகும்.

மோட்சத்திற்கும் ஜீவனுக்கும் சம்பந்தம், தேகத்திற்கும் தெள்ளிய முக்திக்கும் சம்பந்தமின்று. அகாமன், ஆப்த காமன், நிஷ்காமன் என்கின்றது சுருதி. ஆசையற்றவனும், நினைத்ததை முடித்தவனும், ஆத்மாவையடைந்தவனும் எவனே அவனுக்குப் போய் அடைய வேண்டுவதில்லை. பிரஹ்மத்தை அறிந்ததும் அவன் பிரஹ்மம் ஆகின்ருன். ''நதஸ்மாத்'' என்னும் வாக்கியத்தால் ஜீவனிடத்திலிருந்து பிராணனை விலக்கியிருக்கிறதே யொழிய சரீரத்திலிருந்து அல்ல.

பிராணன் இல்லாமல் ஜீவன் பிரயாணம் செய்ய முடியாது. ஆதலின் உயிரோடு ஆவி உடன் செல்கின்றது. உயிர்—ஜீவன். ஆவி—பிராணன். 12

அ—கை.

**பிரயாணஞ் செய்கின்ற புருஷனுடைய பிராணனுக்கு கதி-(செல்லுந் தன்மை) உடலிலிருந்து உண்டாகிறது என்ற**

வர்தத்தை நீக்கும் பொருட்டு சூத்திரம் —

## சூ. ஸ்பஷ்டோ ஹி யேகேஷாம் 4 – 2 – 13

ஸ்பஷ்ட:, ஹி, ஏகேஷாம் என்று பிரிக்கவும்:

ப.உ. ஏகேஷாம்=காண்வ சாகை யுடையவர் மதத்தில் ஞானிகளின் பிராணன் உடலில் இருந்து வெளியே செல்வதில்லை யென்று உரைத்திருக்கிறது. ஸ்பஷ்ட:= வெளிப்படையாகத் தெரிகிறது. ஹி=ஏனெனின், தத்வ ஞானியின் உயிர்கள் உடம்பில் இருந்து வெளியேறுவதில்லை. உயிர்கள்—ஆவிகள்.

வி.உ. வாதி—தத்வ ஞானிக்கும் கதி—போகுந்தன்மை உண்டு என்று சொல்லுகிறுர்களே அது பொருந்தாது, ஏனெனின், சிலமதத்தில் தேகம் ஐந்தாவது வேற்றுமையில் வருகிறது. சிலர் மதத்தில் ஜீவன் ஐந்தாவது வேற்றுமையில் வருகிறுன். யார் மதத்தில் ஜீவன் ஐந்தாவது வேற்றுமையில் வருகிறுனோ அவர் மதத்தில் ஜீவனில் இருந்து ஆவி பிரியவில்லை யென்பது பொருள். யார் மதத்தில் உடல் ஐந்தாவது வேற்றுமையில் வருகிறதோ அவர் மதத்தில் காயத்திலிருந்து பிராணன் பிரியவில்லை யென்பது பொருள்.

மன்னன் ஜனகன் அவையில் யாக்ஞவல்க்யரோடு ஆர்த்தபாகன் வாதிட்டான். அவ்வாதத்தில் ஆர்த்தபாகன் வினவுதல் ''யத்ராயம் புருஷ: மிரியதே உத அஸ்மாத் பிராணு; க்ராமந்தி ஆஹோ நேதி'' பிரு-உ. 3-2-11 ஹே யாக்ஞ வல்க்ய! யத்ர=எந்த வேளையில் அயம் புருஷ:= தத்வஞானி. மிரியதே=சரீரத்தை விடுகிறுனோ. அவ்வேளையில் அஸ்மாத் இவனது. (உத்க்ராந்தி) பிராணன் வெளியேறுகிறதா, நேதி=வெளியேறவில்லையா என்பது இவனது வினு. ''விடை நேதி ஹோவாச யாக்ஞ வல்க்ய:'' வெளியேறவில்லை யென்று யாக்ஞவல்க்யர் சொன்னுர்.

அங்ஙனமாயின் அவர்கள் பிராணனுக்கு நிலேயென்ன எனின், நெருப்பில் விழுந்த நீர்த்துளி போல் ஆன்மாவில் அடங்கி விடுகின்றன. தேகத்திலிருந்து உத்க்ராந்தி சொல்லப்பட்டதே தவிர, தேகியிலிருந்து உத்க்ராந்தி சொல்லவில்லே. தேகி—ஜீவன். உத்க்ராந்தி—செல்வது. கண்ணிலிருந்தோ, தலேயிலிருந்தோ, வேறு இடத்திலிருந்தோ வெளியேறுகின்றது என்பது மறை மொழி. ஆன்மா வெளியேறியதும் அதனுடன் அந்நிய பிராணனும் ஏகுகின்றது. அதன்பின் பொறிகளும் செல்லுகின்றன.

இம்மாதிரி சகுண பிரஹ்ம உபாசகர்களுக்கு (கதி) செல்லும் தன்மையை செப்பிவிட்டு இந்த மாதிரி ஆசையுடையவனுக்கு சம்சாரம் உண்டென்று உரைக்கப் பெற்றிருக்கிறது. எனவே இறைவழிபாடு செய்யும் உபாசகர்களுக்கு சொன்ன போக்குவரவு ஞானிகளுக்கு இல்லே யென்று விலக்கியிருக்கிறது. ஞானிக்குப் போக்குவரத்து உண்டு என்பது பொருத்தமற்றதாகும். ''அத்ரைவ பிரஹ்ம சமஸ்நுதே'' என்கின்றது சுருதி. தத்வஞானி இங்கேயே பிரஹ்மத்தையடைகிருன் என்பது மறையின் பொருள். இம்மொழிகளால் ஞானிக்கு கதியும் உத்க்ராந்தியும் இல்லே யென்பது புலனும். 13

அ—கை.

கூறிய பொருளேச் சீரிய முறையில் செப்புவதற்கு இதிகாச வாயிலாக சூத்ரம் :—

## சூ. ஸ்மர்யதேச 4-2—14 [1]

ப.உ. ''தேவாபி மார்க்கே முஹ்யந்தி'' இந்திராதி இமையவர்களும், இந்நெறியில் மயக்கத்தை யடைகிருர்கள் என்ற வாக்கியத்தாலும் ஞானிகளுக்கு கதியும் உத்க்ராந்தியும் இல்லே யென்று புலனுகின்றது.

வி.உ. மகாபாரதம் என்னும் மகத்தான நூலில் இதைப் பற்றி விரிவாக வரையப்பட்டிருக்கிறது—

4 4 4
சர்வ பூதாத்ம பூதஸ்ய சம்யக் பூதானி பஸ்யத:'
3 3 3
தேவாபி மார்க்கே முஹ்யந்தி அபதஸ்ய பதைஷிண:"

இ—ள். எல்லா பூதங்களுக்கும் எது ஆத்ம சொரூபமாக இருக்கிறதோ யாருக்கு எல்லா உயிரும் நமது வடிவமென்று உறுதியான உணர்வு இருக்கிறதோ, அவனுக்கு அடைய வேண்டிய இடமில்லை. அப்படிப்பட்ட நிலையுள்ள நிலையை தேவர்களும் அடைய ஆவல் கொள்கிறார்கள் என்பதுஸ்மிருதியின் பொருள். அவர்களுக்கும் அந்நெறியில் சிறிது மயக்கமிருந்தது.

இவ்வாறு ஞானிக்கு (கதி) உத்க்ராந்தி இல்லையென்று நன்கு தெரிகிறது. பிரதிவாதி—அங்ஙனம் ஆயின் வியாசருடைய மகன் சுகன் சூரிய உலகத்திற்குச் சென்றான், அவனுடன் அவன் தந்தை வியாசருஞ் சென்றார் என்று மொழிந்திருக்கிறதேயென்பாயாகில் அது சரியல்ல. ஏனெனின், அவன் தனது யோகவலியால் காயத்தோடு மேல் உலகஞ் சென்றான் என்பது கருத்து. அவன் யோகநிலை செல்லும் போது எல்லோரும் பார்த்தார்கள். இதனால் அவன் உடம்போடு சென்றானே யொழிய உடம்பை விட்டு அவன் ஆத்மா செல்லவில்லை. யோகிகள் யோக பலத்தால் தனது எண்ணப்படி யெங்கும் போகலாம் தனது உடலை யெங்கும் விடலாம். சுகதேவர் காற்றைப் பார்க்கிலும் வேகமாய்ச் சென்று உடலை விட்டாரென்றும் விளம்பியிருக்கிறது. இதனாலும் தத்வ ஞானிக்கு கதியில்லை யென்பது இனிது புலனும். 14

7, வாக்காதி லய அதிகரணம் 15

அ—கை.

தத்வ ஞானி உடலை விட்டதும் பரலோகஞ் செல்வ

தில்லை யென்றால் பிறகு அவன் நிலை யென்ன யென்பதற்கு சூத்திரம் :—

2

## சூ. தாநி பரே ததா ஹி ஆஹ 4-2-15

தாநி, பரே, ததா, ஹி, ஆஹ என்று பிரிக்கவும்.

ப.உ. தாநி=ஞானியின் கரணங்கள் அனைத்தும், பரே=பரமாத்மாவில் ஒடுங்குகின்றன. ஹி=ஏனெனின், ததா ஆஹ=அவ்வாறு ஆரணம் அருளுகின்றது. ஆரணம்—சுருதி.

வி.உ. தத்வ ஞானியின் பிராணன் என்று சொல்லப் படும் பொறிகள் அனைத்தும் ஆத்மாவில் அடங்கி விடுகின்றன. ''சர்வம் பர ஆத்மநி சம்ப்ரதிஷ்டதே'' எல்லா கருவி கரணங்களும் பர பிரஹ்மத்தினிடத்தில் லயத்தை அடைகின்றன, என்பது மறையின் பொருள்.

''ததாஹியாஹ'' ஏவமேவ அஸ்ய பரிதிருஷ்டு: = இந்த மாதிரி தத்வ ஞானியின் இமா: சோடசகலா:=மந முதலிய பதினாறு கருவிகளும். புருஷாயணா:=நதிகள் எல்லாம் கடலை நோக்கிச் செல்வது போல் கரணங்கள் எல்லாம், ஆத்மாவை நோக்கிச் செல்கின்றன. புருஷம் பிராப்ய=ஆத்

3

மாவை அடைந்து. அஸ்தம் கச்சந்தி=மறைந்து விடுகின்றன என்பது மற்றொரு சுருதி. பிர.உ.) 6-5)

பிரதிவர்தி=அங்ஙனமாயின் ''கதா: கலா: பஞ்சதஸ பிரதிஷ்டா:'' 3-2-7) முக்தியடையும் போது அடுத்த சரீரத்தைக் கொடுக்கத் தக்க பிராணன் முதலிய பதினைந்து கலைகளும் ஆத்மாவை விட்டு வேறு இடங்களில் தனது காரணங்களில் ஒடுங்குகின்றன என்று உரைத்திருக்க, எல்லாம் ஆத்மாவில் ஒடுங்குகின்றன என்று எவ்வாறு கொள்வது, வாதி அதனால் குற்றம் ஒன்றுமில்லை; எங்ஙனமெனின், இச்சுருதி விவகார நிமித்தமாகும். ஞானியின் கரணங்கள் பரமாத்மாவில்

ஒடுங்குகின்றன் என்பது முக்கிய சுருதி. முன்னே சொன்னது வியவகாரத்தைப் பற்றியிருக்கிறது, பின்னே சொன்னது ஞானியைப் பற்றியிருக்கிறது. இதனல் குற்றம் ஒன்றுமில்லே. 15

8 அவிபாக அதிகரணம். 16

அ—கை.

அக்ஞானிகள் போல ஞானியின் ஆத்மா ஆத்மாவில் கலந்தும் வேருயிருக்கிறதா அல்லது ஒன்ருயிருக்கிருதா என்றக் கேள்விக்கு பதில் —

4 3 1

சூ அவிபாகோ வசநாத் 4 –2--16

அவிபாக:, வசநாத், என்று பிரிக்கவும்.

ப.உ. அவிபாக:=ஞானிகளின் கரணங்கள் பிரஹ்மத்தோடு கலந்து ஒன்ருய் விடுகின்றன. இஃது எங்ஙனந் தெரிகிறதென்பாயாகில், வசநாத்=சுருதி வாக்கியத்தால்.

வி.உ. முற்கூறிய ஒடுக்கத்தை உறுதி செய்யும் பொருட்டு 'அவிபாக வசந' மென்ருர். பிரளயம் இருவகைத்து—சாவயவம், நிரவயவம். காரணத்தைவிட்டு காரியம் மட்டும் லயமாவது சாவயவம், காரணத்தோடு காரியம் லயமாவது நிரவயவம். இதில் ஞானிக்கு எந்தப் பிரளயம் என்பது சந்தேகம். உனக்கு எங்ஙனந் தெரிகிறதெனின்? சாவசேஷ பிரளயம் என்று தெரிகிறது. உறக்கத்தைப் போல. உறக்கத்தில் காரணரூப அஞ்ஞானம் இருக்க கருவிகள் மட்டும் ஒடுங்குகின்றன. அது போல என்று அறிக.

வாதி—அது பொருந்தாது. ஏன்? வசநாத்: வசனம்
4
சுருதி. ''பித்யேதே தாசாம் நாம ரூபே புருஷ இத்யேவம் ப்ரோச்யதே ச ஏஷோ அகலோ அமிர்தோபவதி'' பிர.உ. 6-5) கலேகளுடைய நாம ரூபம்—பெயரும், வடிவமும் நஷ்ட

மாகி விடுகின்றன. அந்த ஞானி பிரஹ்ம வேத்தாவென்று சொல்லப்படுகிருன், மேலும் கலைகள் இன்றிய அமிருத வடிவமாகின்ருன் என்பது வசனம். சுருதி வசனமென்றுக் கூட்டுக. கலைகள் முழுதும் அக்ஞானத்தால் வந்தவை. மெய் யுணர்வு பொய்யுணர்வைப் போக்கியதும் கலைகளனைத்தும் களண்டு விழுந்தன. எனவே மெய்ஞ்ஞானிகளுக்கு சாவ சேஷபிரளயம் பொருந்தாது. ஆகையால்நிர்வி சேஷப் பிர ளயமென்பதுப் புலனும். எல்லாக் கலைகளும் ஆத்மாவில் அபின்னமாக ஒடுங்கி விட்டன என்பது கருத்து. அவிபாகம் —அபின்னம். இரண்டற்றத் தன்மை. 16,

## (9) ததோகோ அதிகரணம் சூ. 17

### அ—கை.

இது வரைத் தொடர்ந்து வந்த பரவித்தை விசா ரம் முடிந்தது. இப்பொழுது அபரவித்தையின் விசாரம் செய் யப் படுகிறது.

**சூ. ததோகோ அக்ரஜ்வலநம் தத்பிரகாசித த்வாரோ வித்யாசாமர்த்யாத் தத்சேஷகத்யா அநுஸ் மிருதி யோகாச்ச ஹார்தாநுக்ருஹீத : சதாதிகயா 4—2—17**

ததோகோ, அக்ரஜ்வலநம், தத்பிரகாசிதத்வார : வித் யாசாமர்த்யாத், தத்சேஷகதி அநுஸ்மிருதி யோகாத், ச, ஹார்தாநு க்ருஹீத : சதா அதிகயா என்று பிரிக்கவும்.

ப.உ. ததா அக்ரஜ்வலநம் =இவ்வுடலில் இருந்து வெளியேறுகின்றவன் இதயத்தில் இருந்து ஒளி வருகின் றது. தத் பிரகாசித துவார : அந்த ஒளிமய வழியிலிருந்து வெளியேறும் உபாசகன். வித்யாசாமர்த்யாத்=அபரவித்தை யின் வலியால். தத்சேஷகதி அநுஸ்மிருதி யோகாத்=வித்

தைக்கு அங்கமாக இருக்கும் பிரஹ்மலோகம் செல்லும் ஞாபகத்தோடு ஹார்தாநுக்ருஹீத := இதயத்தில் வாழும் இறைவனது கிருபையாலும். சதாதிகதயா = நூற்றுக்கு மேலான சிரசில் உள்ள நாடி வழியாகவும் சத்ய உலகஞ் செல்லுகிருன்.

வி.உ. பரவித்தையைப் பேசி முடித்தாகி விட்டது. இப்பொழுது அபரவித்தையைப் பற்றி சிந்திக்கப்படுகிறது. அறிஞனுக்கும் அறிவிலிக்கும் குறிப்பிட்ட எல்லேவரை கதி சமானம். பொது. இப்பொழுது போகும் விதம் புகலப்படுகிறது. விதம்—தன்மை. எல்லாக் கரணங்களும் ஒடுங்கிய பிறகு வெளியேற விரும்பிய ஜீவனுக்கு இடம் இதயம். ஏனெனின்?

4 3 3

''ச ஏதாஸ்தேஜோமாத்ரா : சமப்ய ஆததாநோ ஹிருதயம் ஏவ அந்வக்ராமதி'' என்கின்றது சுருதி. ச = ஜீவன் உறக்கத்திற்குப் போகும் போது. தேஜோமாத்ரா: = சகல கருவிகளையும். ஹிருதயம் ஏவ = கூட்டிக் கொண்டு இதயத்திற்குச் செல்லுகின்ருன் என்பதை ஆததாந அன்வகிராமதி யென்னும் வாக்கியந் தெரிவிக்கிறது.

இதயத்தின் இனிய முன்பக்கத்தில் ஒளி இருக்கிறது. அப்பிரகாசத்தினுல் கண்வழியாகவோ, காது மூக்கு வழியாகவோ இச்சீவன் மேல் உலகத்திற்குச் செல்கிருன் என்பது சுருதி வாக்கியம். இக்கமனம் ஞானி அக்ஞானி யிருவருக்கும் பொதுவா அல்லது ஞானிக்கு விசேஷமாகவா என்பது சந்தேகம்.

வாதி—இதயம் வரை இருவருக்கும் பொதுவாக இருப்பினும் அங்கிருந்து வெளியேறும் யோகிகளுடைய உயிர் சிரசைப் பிளந்து கொண்டு சுஷும்நா நாடி வழியாக் மேலுலகஞ் செல்கின்றது. அஞ்ஞானிகள் உயிர் உடலில் உள்ள மற்றைய துவார வழியாக இங்கும் அங்குமாகச் செல்கின்றது. இதுதான் ஞானிகளுக்கு விசேடமாகும்.

எங்ஙனம் தெரிகிறதெனின், வித்தையின் வலியால் என்பது பொருள். வழிபாடு செய்கின்ற உபாசகனும் அறிவிலிகள் போல ஒன்பது துவாரமுள்ள உடலில் இருந்து எவ்வழியிலும் வெளியேறுவானுனல் வழிபாட்டிற்கு என்னை மரியாதையிருக்கிறது, ஒன்றுமில்லாமற் போகும்.

இதயத்திலிருந்து ஆயிரக்கணக்கான நாடிகள் எழுகின்றன, அவைகளில் நூற்றியொரு நாடிகள் சிறந்தவை. அவைகளில் ஒரு நாடி மிகச் சிறந்தது. அதற்குச் சுஷும்னை நாடியென்று பெயர். அந்நாடியோடு உபாசகனுக்குத் தொடர்பு உண்டாகிறது. இத்தொடர்பை யுண்டுபண்ணுவது உள்ளத்திலிருக்கும் பிரஹ்மத்தின் வழிபாடாகும். அதன் அருளினல் உபாசகன் மேலுலகஞ் செல்கிருன் என்பது கருத்து. அங்கு சென்று அயனுலகத்தில் உள்ள அமுதத்தை நுகருகிருன் என்பது உறுதி. 17,

10, ரசிமி அதிகரணம். 18,

அ—கை.

இதயத்திலிருக்கின்ற ஆன்மாவை வழிபடும் வித்தைக்கு ஹார்த வித்தையென்று பெயர். அதன் விரிவை உரைப்பதற்குச் சூத்திரம்.

## சூ. ரஸ்மி அநுசாரீ 4—2—18

ரசிமி, அநுசாரியென்று பிரிக்கவும்.

ப.உ. சுஷும்ந நாடி வாயிலாக தேகத்திலிருந்து வெளியேறும் உபாசகன், நாடியின் தொடர்புள்ள சூரியக் கிரணங்களோடு சென்று அயன் உலகத்தையடைகிருன். அயன்—பிர்ஹ்மா. அவன் உலகத்திற்குச் சத்யஉலகமென்று பெயர்.

வி.உ. வித்தைகளில் ஹார்த்த வித்தையென்று ஒரு
2 3 3
வித்தை. ''அத யதிதம் அஸ்மின் பிரஹ்மபுரேதஹரம் புண்டரீகம் வேஸ்ம'' சா.உ. 8-1-1 என்கின்றது சுருதி. இ—ள்

அத=இப்பொழுது. அஸ்மின் பிரஹ்மபுரே=இந்த பிரஹ்ம புரத்தில் — இதயத்தின்கண்—இதய தாமரையின் உள்ளே என்று உரைத்துவிட்டு உள்ளிருக்கின்ற ஆன்மா தனது சொரூபம் என்று அருளியிருக்கிறது. இதற்கு ஹார்த்த வித்தையென்று பெயர்.

அவ்விதயத்தின்கண் பல நாடிகள் இருக்கின்றன.

1 3 4
''சதம்சைகாச ஹிருதயஸ்ய நாட்ய: தாசாம் மூர்த்தாநம்
4 4
அபி நிஸ்ருதைகா தயோர்தவம் ஆயன் அமிருதத்வம் ஏதி
4
விஸ்வங்ஙந்யா உத்க்ரமணே பவந்தி'' சா.உ (8-6-6)

இ—ள்

ஹிருதயஸ்ய நாட்ய: ஹிதயத்தில் இருக்கின்ற நாடிகள் பல. அதில், சதஞ்ச ஏகா நாட்ய:. நூற்றியொரு நாடிகள் முக்கியமாக இருக்கின்றன. அந்நாடியில் ஒரு சுஷு‌ம்ந நாடி மூர்த்தானம்=சிரசிலிருந்து, அபிநிஸ்ருதா=வெளிப் புறப்பட்டது. தயா ஊர்த்வம் ஆயன்=அந்த நாடி வழியாக பிரஹ்ம லோகஞ் சென்று அமிருதத்வம் ஏதி=அயன் உலகத்து இன்பத்தைத் துய்க்கிருன். யார்? யோகி. உபாசன். விஷ்ஙங்ந்யா:=மற்றைய நாடிகள் நான்குப் பக்கங்களிலும் சிதறிக்கிடக்கின்றன. உத்க்ரமணே பவந்தி=அவ்வழியாகச் செல்பவர்கள் மீண்டும் பிறவியை மேவுவர் என்பது சுருதிப் பொருள். பிரதிவாதி—ஆதவன் கிரண வழியாக செல்கின்ற யோகி, இரவும் பகலும் செல்கின்ருனு அல்லது பகல் மட்டும் செல்கின்ருனு என்பது கேள்வி. வாதி—இரவும் பகலும் செல்கின்ருன் என்று தெரிகிறது. சூ. 18,

அ—கை.

இரவும் பகலும் எப்போது உபாசகன் செல்வானுனல் இரவில் பகலவன் இல்லாததால் கிரணத்தோடு எங்ஙனஞ்

செல்ல முடியும் என்பது பிரதிவாதியின் வாதம். அதற்குச் சூத்திரம்.

**சூ நிசிநேதிச் சேந்ந சம்பந்தஸ்ய யாவத் தேக பாவித்வாத் தர்சயதிச 4—2—19**

நிசி, ந, இதி, சேத், ந, சம்பந்தஸ்ய, யாவத்தேக பாவித்வாத், தர்சயதி, ச, என்று பிரிக்கவும்.

ப.உ. பகற்பொழுதில் நாடி ரஸ்மிகளுக்கு தொடர்பு இருப்பதால் பகலில் உபாசகன் ரஸ்மியோடு கலந்து செல்லுகிறுன் என்பது பொருந்தும். நிசி=நாடி ரஸ்மி சம்பந்தம் இல்லாததால் எவ்வாறு பொருந்தும்? பொருந்தாது. நிசி—இரவு. இது பிரதிவாதி மதம். வாதி—பொருந்தும்.

எங்ஙனமெனின், சம்பந்தஸ்ய யாவத் தேகபாவித்வாத்=நாடி நரம்பு, ரஸ்மி இவையெல்லாவற்றிற்கும் உடல் இருக்கும் வரை சம்பந்தம் உண்டு. உடல் பகலிலும் இருக்கிறது இரவிலும் இருக்கிறது. ஆகையால் யாவத் என்றுர். தர்ஸயதி="அமுஷ்மாத் ஆதித்யாத்" என்ற சுருதி அறிவிக்கிறது. இக் கிரணங்கள் சூரிய மண்டலத்தில் பரந்திருக்கின்றன என்பது மறையின் பொருள்.

வி.உ. இரவில் ஆதவன் இல்லாததால் கிரணங்களும் இல்லை. அஃது இல்லாததால் கிரணங்களோடு சம்பந்தமும் இல்லை. அதனுல் ரசிமியோடு போகிருன் என்பது நியாயமில்லை என்பது எதிரியின் வாதம். மேலும் அவன் தரும் தருக்கம்—உயிர் பகலிலும் பிரியும், இரவிலும் பிரியும். பகலில் பிரியும் போது கதிரவன் கதிர் கிடைக்கும். அதனோடு தொடர்பு கொண்டு மேல் உலகஞ் செல்ல இயலும், இரவில் யோகி உயிர் பிரிந்தால் கிரணங்கள் எவ்வாறு கிடைக்கும், கிடைக்காது. மரணத்திற்கு கால நியமம் இல்லை, மிருத்யு கால அநியமாத் என்பது ச. பாஷ்யம்.

வாதி—இரவு பகல் என்பதல்ல, பின்னை உடல் இருக்கும் வரையென்பது பொருள். கோடைக் காலத்தில் இரவிலேயும் சூரிய கிரணங்கள் பரவியிருக்கின்றன. இதனாலன்றோ இரவி லும் வெப்பந் தாழாமையால் கையில் விசிறி கொண்டு மக் கள் வீசுகின்றனர். சுருதியும் அவ்வாறு சொல்லுகின்றது.
3 4
"அஹரேவ ஏதத் ராத்ரௌ ததாதி" சூரியன் இராத்திரி யில் வெப்பத்தைத் தாங்குகின்றது என்பது மேலே சொன்ன சுருதியின் பொருள்.

அங்ஙனமாயின் எல்லா இரவிலும் வெப்பம் ஏன் காணப்படவில்லை யென்பாயாகில், அதற்குப் பதில்—மற் றைய காலங்களில் வெப்பம் இருந்தாலும் குளிர் அதிகமா யிருப்பதால் அது தெரிகிறதில்லை. எனவே இரவு பகல் எந்த வேளையிலும் உடலை விட்ட உயிர் சூரிய கிரணத்தோடு சம் பந்தப் பட்டு மேலுலகம் செல்கின்றது என்பது புலனும்.
19,

## (11) தக்ஷிணாயன அதிகரணம். 20-21

அ—கை.

தக்ஷிணாயனத்தில் இறந்த உபாசகனும் அயன் உலகத் தை யடைகிறானா என்றக் கேள்விக்குப் பதில் சூத்திரம்.

1
### சூ. அதஸ்ச ஆயநே அபி தக்ஷிணே 4—2—20

அத:, ச, ஆயநே, அபி, தக்ஷிணே என்று பிரிக்கவும்.

ப.உ. அத:=தக்ஷிணாயனம் உத்ராயணம் என்று விரும் பாததால். தக்ஷிணஅயநே அபி = தக்ஷிணாயனத்திலும் உயிரை விட்ட யோகி. நான்முகன் நாட்டையடைகிறான். வழிபாட்டின் பயனை பெறுகிறான்.

வி.உ. இவ்வதிகாரத்தில் தக்ஷிணாயனத்தில் உயிரை விட்ட யோகியைப் பற்றிப் பேசப்படுகிறது. தக்ஷிணாயனத் தில் உயிரைத் துறந்த யோகி திசைமுகன் உலகை சேருகி

ருஞ இல்லையா என்பது ஆராயப்படுகிறது. சந்தேகத்திற்குக் காரணம் யாதெனின், வழிபாட்டிற்கு உரிய பயன் அவஸ்யம் உண்டு. தக்ஷிணயனத்தை நோக்கும் போது உத்ராயணஞ் சிறந்ததாகச் செப்பப்பட்டிருக்கிறது. அதனுல் 'அதஸ்ச' என்பதால் ஐயங் கிளப்பப்படுகிறது. பீஷ்மரும் தக்ஷிணயனத்தில் இறக்கக் கூடாதென்று உத்ராயணத்தை யெதிர் நோகியதாகப் புராணங்களில் புகலப் பட்டிருக்கின்றது.

''ஆபூர்யமாணபக்ஷ . . . . சுக்லபட்ச அபிமானி தேவதையால் உத்ராயணத்திற்கு உரிய ஆறு மாத காலத்தை அடைகிருர்கள் என்று ஆம்நாயத்தில் அருளியிருக்கிறது. ஆம்நாயம்—வேதம். உத்ராயணத்தை விரும்ப வேண்டும். என்றது ஆன்ம உணர்வு இல்லாதவர்க்காக. ஞானிகளுக்கன்று. அங்ஙனமாயின் பீஷ்மர் ஞானி இல்லையா என்பது கேள்விக்குறி. பீஷ்மரை அக்ஞானியென்று அறைய இயலாது. ஏனெனின்? ''பீஷ்மோஹி தேவ என்கின்றது வேதம். இதனுல் ஞானியென்பது தெளிவு. ஆனுல் பீஷ்மரும் உத்ராயணத்தை யெதிர்பார்த்திருந்தாரென்று சொல்லியது எவ்வாறு பொருந்தும் என்பது பிரச்னே. சமாதானம், பீஷ்மர் புண்ணிய காலத்தை யெண்ணியிருந்ததற்குக் காரணம். முன்ஞேர்கள் நெறிமுறையைக் காப்பதற்காகவும், தந்தை தந்த வரம் பலிக்கிறதா என்பதற்காகவுமாம். இதனுல் ஞானிக்குக் கால நிரணயம் இல்லையென்பது இனிது புலனும். 20,

அ—கை.

கீதையில் பகவான்—ஏ அருஜுனா! எந்த காலத்தில் உடலை விடுத்து வெளியேறிய யோகிகள் மீண்டு இங்கு வாரா நெறியும் வரும் நெறியும் உண்டாகுமோ அக்காலத்தை அருளுகின்றேன் என்று சொல்லி பகல், வளர்பிறை, புண்ணியகாலம், இதில் இறந்தவர்கள் மீட்டு வரமாட்டாரென்றும், இரவு, தேய்பிறை, தக்ஷிணயனம், இக்காலத்தில்

உயிரைத் துறந்தவர் மீட்டு வருவாரென்றும் சொல்வீரன் சொல்லியிருக்க மேலே சொன்னது பொருந்துவது எங்ஙனம் என்பதற்கு சூத்திரம்.

**சூ. யோகிநः[3] பிரதி[1] ச ஸ்மர்யதே[1] ஸ்மார்தேச ஏதே 4—2—21**

யோகிந;, பிரதி, ச, ஸ்மர்யதே, ஸ்மார்தே, ச, ஏதே, என்று பிரிக்கவும்.

ப.உ. யோகிந: பிரதி=கரும யோகிக்காக ஏதே=பகல், வளர்பிறை முதலிய காலத்தை மொழியப்பட்டிருக்கிறது. ஸ்மர்யதே=சொல்லப்பட்டிருக்கிறது. எங்கே? ஸ்மார்த்தே கீதையிலும், யோக நூல்களிலும்.

வி.உ. நநு—சங்கை. ஸ்மிருதி நூல்களில் சொன்ன முறையைக் கையாண்டதால்இவண் ஐயம் உண்டாகிறது. இந்த ஐயத்தை அகற்றும் பொருட்டு 'யோகிந:' என்ருர். காலம், பக்ஷம் இவைகளைக் கருத்துள் கொண்டது. கரும யோகிகளுக்காக.

காலத்தை விரும்ப வேண்டுமென்றது ஸ்மிருதி நூல் களிலும், யோக நூல்களிலும் ஆம். சுருதிகளில் சொல்ல வில்லை யென்பது துணிபு. அங்ஙனமாயின் சுருதி வாக்கியத் திலும், ஸ்மிருதி வாக்கியத்திலும் பேதம் வருமே யென்ப தற்குப் பதில் விசாரம்[3]—சுருதியில் தகர உபாசனை சொல்லப் பட்டிருக்கிறது. அங்கு பயனைப் பெறுவதற்கு காலத்தைக் குறிப்பிடவில்லை.

ஸ்மிருதியில் கருமயோகிகளுக்குப் பலனைப் பெறு வதற்குக் காலத்தைக் குறிப்பிட்டிருக்கிறது. ஸ்மிருதியில்

சொல்லியிருக்கிற யோகி வேறு, சுருதியில் சொல்லியிருக்கிற யோகி வேறு.

ஸ்மிருதி நூல்களிலும் அக்னி ஆதி தேவதைகளை ஆதி வாஹிகம்—உபாசகனை மேலே கொண்டு போகின்ற தேவதைகள் என்று கூறியிருக்கின்றன. இதனாலும் விரோதம் இன்று. எனவே தக்ஷிணாயனத்தில் இறந்த யோகிகளும் அயன் உலகத்தையடைகிறார்கள் என்பதில் ஐயமில்லை. சூ. 21

நான்காம் அத்யாயத்தின் இரண்டாவது பாதம் முற்றிற்று.

நான்காவது அத்யாயத்தின் மூன்றும் பாதம். இந்த பாதத்தில் உபாசகர்களுக்கு உத்ராயண மார்க்கம் கூறப்படுகிறது.

(1) அர்சிராதி அதிகரணம் சூ. 1

அ—கை.

இரண்டாவது பாதத்தில் ஞானி அக்ஞானி என்னும் இருவருக்கும் குறிப்பிட்ட எல்லவரை வழி யொரே மாதிரி யென்றும், பிறகு அக்ஞானி வினையின் வலியால் உடலைப் பெற்று சம்சாரத்தை நோக்கி வருகிருன் என்றும், ஞானி சூரிய வழியாக பிரம்மலோகம் செல்கிருனென்றும், பிரம்ம லோக வழியை, அர்ச்சி மார்க்க மென்றும், உத்ராயண மார்க்க மென்றும், தேவையான மார்க்க மென்றும், இம்மாதிரி பலவாருகப் பகரப்பட்டிருக்கின்றன. இவ்விஷயத்தில் சந்தேகம். இவ்வழிகள் வெவ்வேரு அல்லது ஒரே வழிக்குப் பல பெயரா என்பது ஐயம். இவ்விஷயத்தை உறுதி செய்யும் பொருட்டு மூன்ருவது பாதத்தில் முதலாவது சூத்திரம்—

**சூ. அர்ச்சிராதிநா[3] தத் பிரதிதே[2] : 4—3—1**

அர்ச்சி; ஆதிநா, தத் பிரதிதே: என்று பிரிக்கவும்.

ப.உ. அர்ச்சிராதிநா=(யோகிகள்) எல்லோரும் சூரிய வழியாக விதியின் உலகத்திற்குச் செல்கின்ருர்கள். தத் பிரதிதே: = எல்லா யோகிகளுக்கும் இவ்வழிதான் பிரசித்தியாக இருக்கிறது.

வி.உ. திசைமுகன் உலகத்தை அடைய விரும்பும் யோகிகள் அனைவரும் அரிச்சி மார்க்கமாகச் செல்கின்றனர். ''அத[2] ஏதை: ஏவ ரஸ்மிபி: ஊர்த்வம்[4] ஆக்ரமதே'' சா.உ. (8—6—5) அத=மரணத்திற்குப்பின். ஏதை: ரஸ்மிபி:= இக்கிரண வழியாக, ஊர்த்வம்=மேலே. ஆக்ரமதே=

பத்மாசனன் உலகத்தை பெறுகிறுர்கள் என்பது மறையின் பொருள். பத்மாசனன்—பிரம்மன்.

பஞ்சாக்னி வித்தையில் சந்நியாசி, அல்லது வானப் பிரஸ்த்தன் இவர்கள் வனத்தில் நம்பிக்கையோடு மலரவனை வழிபடுகின்றனர். அவர்களும் அரிச்சி வழியாக செல்கின் றனர் என்று செப்பியிருக்கிறது. மலரவன்—நான்முகன். செப்புதல்—சொல்லுதல். இம்மாதிரி வேறு வித்தைகளை வழி படுபவர்களுக்கும் அவ்வழியே அருளப்பட்டிருக்கிறது. எந்த வித்தைக்கு கதி சொல்லவில்லையோ அந்த வித்தையில் அரிச்சி மார்க்கம் சொல்லட்டும், எந்த வித்தையில் கதி சொல்லப்பட்டிருக்கிறதோ அங்கு அரிச்சி மார்க்கம் ஏன் கூற வேண்டும் என்பது பிரதிவாதி வாதம். வாதி—வழிகள் முற்றிலும் வேறு வேருக இருந்தால் நீ மொழிவது சரிதான். ஆனுல் இவ்வழிகளெல்லாம் பல விசேஷணங்களோடு இருந் தாலும் வழியொன்றுதான். ஆகையால் எல்லோருக்கும் அரிச்சிவழி யென்பதால் குற்றம் ஒன்றுமில்லை. மேலும் தே தேஷு பிரஹ்மலோகேஷு பரா: பராவதோ வசந்ததி" பிரு.உ. (6—2—15) தே=யோகிகள். தேஷு : பிரஹ்ம லோகேஷு=அந்த ஹிரண்ய கர்ப்பன் உலகத்தில். பரா : பராவதோ வசந்தி நெடிய ஆயுளைப் பெற்று. வசந்தி=வசிக் கிறுர்கள் என்றும். இவ்வாறு இன்னும் பல சுருதிகள் அரிச்சி மார்க்கத்தை மொழிகின்றன. 'பெரும்பான்மையோ ரைச் சிறுபான்மையோர் பின்பற்ற வேண்டு மென்பது நியா யம், சிறுபான்மையோரை பெரும்பான்மையோர் பின்பற்ற வேண்டுமென்பது அந்ந்யாயம்.

பெரும்பான்மையாக அரிச்சி மார்க்கம் காணப்படு கின்றன. அந்நிய மார்க்கம் சிறுபான்மை. அத: — இதனுல் அரிச்சி மார்க்கம் சிறந்ததென்பது தெற்றெனத் தெளிவாம். சூ. 1

## 2) வாயு அதிகரணம். 2

அ—கை.

ஒரு இடத்தில் கூறப்பட்ட உலகத்தை மற்ற இடத்தில் எவ்வாறு வருவிக்க வேண்டும் என்பதற்குச் சூத்திரம் :-

3 3 4

## சூ. வாயும் அப்தாத் அவிசேஷ விசேஷாப்யாம் 4—3—2

வாயும், அப்தாத், அவிசேஷ விசேஷாப்யாம் என்று பிரிக்கவும்.

ப.உ. அப்தாத் = (சம்வத்சரம்) — ஆண்டு கழிந்த பிறகு, சூரியனுக்கு முன்னர். வாயும்=வாயு வுலகத்தை அடைகிறான் அவிசேஷ விசேஷாப்யாம் = பொதுவாகவும் விசேடமாகவும் கூறியிருக்கிறது.

வி.உ. ஒரு உலகத்தோடு மற்றொரு உலகத்திற்கு சம்பந்தமும். ஒரு விசேஷணத்திற்கு மற்றொரு விசேஷணத்தோடு சம்பந்தமும் எவ்வாறு பொருந்தும் என்பதற்குக் குரு அருளுகின்றார்—''ச ஏதம் தேவயானம்''...கௌ. உ. 1—3) அவன் இந்தத் தேவயாந வழியை அடைந்து அக்கினியுலகத்தைப் பெறுகிறான், அதன் பிறகு வாயு வுலகத்திற்குப் போகிறான், பின்னர் வருண உலகத்திற்கும், இந்திர உலகத்திற்கும், பிறகு பிரஜாபதி உலகத்திற்கும் செல்கிறான் என்று திருமறைகள் தெரிவிக்கின்றன. இஃது கௌஷிதகி ரிஷிகள் கண்ட உண்மை. இங்கு அக்னி யென்பது அரிச்சியை அறிவிக்கின்றது. இவண் எதையும் அறிவிக்கப்படவில்லை.

வேறு சுருதிகளில் வாயுவால் கொடுக்கப்பட்ட தேர் சக்ரத்தின் துளைபோல் மேலே செல்லுகின்றான் என்று இயம்பப்பட்டிருக்கிறது. இம்மாதிரி முறை காணப்படுகிறது. இதனால் பொதுவாக என்று சொன்னது நியாயந்தான். வாஜசநேயில் மாசத்திலிருந்து வாயுலோகத்தையும், தேவ

லோகத்தையும், தேவலோகத்திலிருந்து வாயுலோகத்தையும் அடைகிருன் என்று மொழிந்திருக்கிறது. சாந்தோக்கியத்தில் மாசத்தின் பின் வருஷம், வருஷத்தின் பின் தேவலோகம் என்ற பாடம் முறையானது. வாஜசநேய முறையைப் பார்க்கிலும் சாந்தோக்கிய கிரமம் மிகச்சிறந்தது. இவ்வாறு விவேகம் பண்ணிக் கொள்ள வேண்டும். சூ. 2

3 தடித்ததிகரணம். சூ. 3

*அ—கை.*

வருணன் இந்திரன், பிரஜாபதி யிவர்கள் உலகத்தைப்பற்றி அரிச்சி மார்க்கத்தில் கூறவில்லை. அவ்வுலகத்தை எந்த வழியோடு சேர்ப்பது என்ற கேள்விக்குப் பதில் சூத்திரம் :-

**சூ தடிதோ[4] அதி வருண[4] : சம்பந்தாத் 4 – 3 – 3**

*தடித:, அதி, வருண:, சாம்பந்தாத் என்று பிரிக்கவும்.*

ப.உ. *தடித:* = வித்யுத் உலகத்திலிருந்து. *அதி* = மேலே. *வருண:* = வருண உலகம். *சம்பந்தாத்* = வருண உலகத்திற்கு மின்னல் உலகத்தோடு தொடர்பு இருக்கிறது.

வி.உ. ''ஆதித்யாத் சந்தரமசம் சந்தரமசோ வித்யுதம்'' சா.உ. 4—15—5) இ—ள் சூரிய உலகத்திலிருந்து சந்தர உலகத்தையும், சந்தர உலகத்திலிருந்து மின்னல் உலகத்தையும் அடைகிருன். அதிலிருந்து வருண உலகத்தை யடைகிருன் என்று சொல்லியிருக்கிறது. இதனுலும் வருண உலகத்தோடு தொடர்பென்பது சொல்லாமலே தெரிகிறது.

மின்னல் உலகத்திற்கும் வருண உலகத்திற்கும் தொடர்பு உண்மை. எப்பொழுது மிகுந்த இடியும், மின்னலும், ஒலியும் உண்டாகின்றனவோ, அப்பொழுது மிகுந்த

மின்னல் மேகத்தின் உதரத்தில் விழுந்து தாண்டவம் ஆடுகிறது அந்நேரத்தில் மழை பொழிகிறது. ''வித்யோததே ஸ்தநயதி: மின்னல் மின்னுகிறது. இடி இடிக்கிறது. ஆகையால் மழை பெய்யும் என்று மக்கள் சொல்லுகின்றனர். இக்கருத்து சுருதியில் உள்ளது. நீருக்கு அதிபதி வருணன் உலகத்திலும், புராணத்திலும் உரைக்கப் பெற்றிருக்கிறது. வருண உலகத்திற்குமேல் இந்திர உலகமும் இருக்கின்றன. இவர்களுக்கு வேறு இடங் கிடையாது. வேறு வழியில்லாததால் அரிச்சி வழியில் இறுதியான இடம் மின்னல் உலகமாகும். இதனால் வித்யுத் உலகமும் அரிச்சியோடு சேர்ந்திருக்கிறதென்பது இனிது புலனும். சூ. 3

4 ஆதிவாஹிக[1] அதிகரணம் சூ. 4—6

அ—கை.

அரிச்சி ஆதி மார்க்கத்தில் அரிச்சி, பகல், பட்சம், அயனம், ஆண்டு, வாயு, மின்னல் இவ்வாறு உரைக்கப் பெற்றிருக்கிறதே, அங்கு கூறியவை ஜடமா அல்லது சேதனமா என்பதற்குப் பதில் சூத்திரம் :-

## சூ. ஆதி வாஹிகா[1] ஸ்தல்லிங்காத்[3] 4—3—4

ஆதிவாஹிகா:, தல்லிங்காத் என்று பிரிக்கவும்.

ப.உ. ஆதிவாஹிகா: = அரிச்சி ஆதி உலகத்திற்கு கொண்டு செல்லப்பட்டவர்கள் சேதன வடிவினர். தல்லிங்காத்=அவ்வாறு சுருதி கூறுகின்றது.

வி.உ. பிரஹ்ம லோகத்திற்கு உபாசகனை நடத்தி செல்கின்றவர்கள் தெய்வத் தன்மை வாய்ந்தவர்கள். "அமாநவ:...என்னும் லிங்க வசனத்தால் தெரிய வருகிறது. ''ச ஏதான்[3] பிரஹ்மகமயதி'' அந்தத் தெய்வத் தன்மை வாய்ந்த

3
வன் ஏநான்=இந்த யோகிகளை. பிரஹ்மகமயதி=அயன் உலகத்திற்கு அழைத்துச் செல்கின்றான். இது சுருதி லிங்கம்.

இந்த அரிச்சி ஆதி வழிகள் இடமா அல்லது, மனிதர் களா, அல்லது தேவர்களில் ஒருவனா என்பது சந்தேகம். பூர்வ பக்ஷி—இவை நுகரும் இடங்கள். எவ்வாறு ஒரு கிராமத்தை விட்டு மற்றொரு கிராமத்தில் தங்குகிறார்களோ அதுபோல் இந்த வழிகளும் தங்கும் இடமென்று தெரிகிறது. மேலும் — கிராமவாசிகள் பட்டியைக் கடந்து ஆறையும் ஆறிலிருந்து குளத்தையும் ஆலமரத்திலும் தங்கியிருந்து, இவ்வாறு அங்கிருந்து செல்வது போல இந்த அரிச்சி முதலிய வழிகளும் பிரஹ்ம லோகம் போகும் அவர்க்கு இடம் என்று எண்ண வேண்டு மென்பது எதிரியின் வாதம்.

வாதி—அது பொருந்தாது, ஏனெனின், இங்கு உலக மென்பது ஜட உலகத்தைக் குறிக்கவில்லை, பின்னை உயரிய மக்களைக் குறிக்கின்றது. பிரதிவாதி — "மநுஷ்ய லோக: பித்ரு லோக: தேவ லோக:" (பிரு.உ) 1—5—16, இம் மூன்று உலகமும் இடத்தைக் குறிக்கிற தென்பது பூர்வ பட்சம். இம் மூன்று உலகமும் அவ்வுலகத்தின் தேவதையைக் குறிக்கு மென்பது சித்தாந்த பக்ஷம். அரிச்சி ஆதிவாஹிக தேவதைகள் அல்ல என்பது எதிரியின் இணக்கமற்ற வாதம். வாதி—வித்யுத் உலகம் வரை சேதன வடிவ தேவதை மேலே கொண்டு செல்கின்றது, மேலே விசேஷ தேவதை நான்முகன் உலகம் வரைக் கூட்டிச் செல்கின்றது. அப்பொழுதுதான் "தத்புருஷோ அமாநவ:" என்றவாக்கியம் பொருத்தமாகும். அமாநவ: = விசேஷ தேவன் என்பது பொருள். முந்தியவன்—மானவன், பிந்தியவன் அமானவன். இதனால் ஆதிவாஹிகத் தேவதைகள் சேதனம் என்பது தெளிவாம். சூ. 4

அ—கை.

இம்மாதிரி அபிமானி தேவதையை ஒப்புக் கொள்ள வேண்டு மென்பதற்குப் பதில் சூத்திரம் :-

## சூ. உபய வியாமோஹாத் தத் சித்தே : 4—3—5

உபய வ்யாமோஹாத், தத் சித்தே: என்று பிரிக்கவும்.

ப.உ. உபய வ்யாமோஹாத் = மார்க்கமும், வழி நடப்பவனும், ஜடமும் பராதீனமாக இருப்பதால் யோகி களுக்கு மேற்கதி உண்டாக மாட்டாது, ஏனெனின், சுவயம் முயற்சியின்மையால் வேறு சேதனத்தால் கொண்டு செல்லப் படுகிறது. இந்நியாயமானப் பிரமாணத்தால். தத் சித்தே: = தலைவனுக்கு அடைவு உண்டாகிறது.

வி.உ. அரிச்சி ஆதி தலைவர் இல்லாததாலும், அசேதனம் ஆனதாலும், பிரஹ்ம லோகம் செல்பவன் உடலும் உறுப்புகளும் இல்லாததானும், வழியும், செல்பவனும் இரண்டிற்கும் இடையில் அறியாமையிருப்பதால் மேலுலகங் கிடைப்பதில்லை, ஆகையால் வேறு மானவன் கூட்டிச் செல்கிறான் என்பது மிகப் பொருத்தம்.

உலகத்திலும் எல்லாம் ஒன்று சேர்ந்த பொறிகளை யுடையவனும், களிப்புற்றவனும், மயங்கி விழுந்தவனும், வேறு மனிதரால் கூட்டிச் செல்லப்படுகிறார்கள். உபயம் இரண்டு. அரிச்சி ஆதிமார்க்கமும் உலகமும் இவையிரண்டை யும் சேதனமென்று கொள்ளவேண்டும், மார்க்க அபிமானி தேவதையும், உலக அபிமானி தேவதையும் என்று கொள்ள வேண்டும். இவையிரண்டையும் ஜடமென்று கொள்ளும் பட்சத்தில் வழி காட்டுந் தன் மோகம் உண்டாகும். மார்க்க ஞான சூன்யமாகும். அந்நிலையில் நான்முகன் உலகம் செல்

வது எங்ஙனம் பொருந்தும். ஏனெனின்? செல்லுகின்ற ஜீவனுக்கு அங்குள்ள வழியைப் பற்றித் தெரியாது. ஆகை யால் வழியைக் காட்டுபவன் ஒருவன் வேண்டும். அதற்கு அரிச்சி யாதிகள்தான் இருக்கிருர்கள். அவர்களை அசேதனம் என்று நீ கூறுகின்ருய். நீயென்பது எதிரி. ஆக இந்நிலையில் தேவயானம் பித்திருயானம் என்னும் விபாகங்கள் உண்டாக மாட்டா.

எனவே அரிச்சி ஆதி உலகத்தைக் குறிக்கும் போது அந்தந்த தேவதைகளை கொள்ளல் வேண்டும். அப்பொழுது தான் திசைமுகன் உலகம் வரை செல்வது சித்திக்கும். அக்கருத்தை வைத்துக் கொண்டுதான் (தத்சித்தே:) என் கின்றது. தன்னுடைய உலகத்திலிருந்து அடுத்த உலகத் திற்கு அனுப்பி வைப்பதுதான் அவர்கள் வேலை. இதனல் அரிச்சி ஆதி தேவதைகள் சேதனமென்பது தெளிவு. சூ. 5

அ—கை.

வித்யுத் உலகத்திலிருந்து அமானவன் கூட்டிச் செல் கின்ருன் என்ருல் மற்றையவர்க்கு என்ன வேலை யென் பதற்குப் பதில் சூத்திரம் :-

3

**சூ. வைத்யுதேநைவ ததஸ்தத் சுருதே: 4—3—6**

வைத்யுதேந, ஏவ, தத:, தத், சுருதே என்று பிரிக் கவும்.

ப.உ. வைத்யுதேந ஏவ = மின்னல் உலகத்தில் இருக் கும் அமானவ புருஷனுல்தான் மின்னல் உலகிலிருந்து மேலே கொண்டு செல்லும் உபாசகன். தத: = காரிய பிரஹ்ம மத்தையடைகிருன். தத் சுருதே: = அவ்விஷயத்தில் "அமா னவ ச ஏத்ய பிரஹ்ம லோகம் கமயதி" அமானவன் என் னும் ஒரு சிறந்த மனிதன். அவனை—யோகியை அயனுல

கத்திற்கு அழைத்துச் செல்கிருன் என்ற மறை மொழியா லும் உணரலாம்.

வி.உ. இருந்த போதினும் வருணனன் முதலியரிடத் தில் கூட்டிச் செல்கின்றத் தன்மை யெவ்வாறு பொருந்தும், ஏனெனில் மின்னுலகத்திற்கு மேலேயல்லவா வருண உலக மிருக்கிறது, மேலும் மின்னல் உலகத்திற்கு அடுத்த படி யாக கமலாசனன் உல்கம் வரை அமானவன் அழைத்துச் செல்கின்ருன் என்று இயம்பி இருக்கிறதே யென்று எதிரி யின் வாதம். வாதி—மின்னல் உலகத்திலிருந்து மேலேறிய பின்னர் இவ்வுலகத்தில் வசிக்கும் அமானவன்—விசிட்டப் புருஷன் வருண உலகம் மற்றுமுள்ள உலகத்தின் வழியாக அழைத்துச் சென்று பிரஹ்மலோகத்திற் கொண்டு நிறுத் துகிருன். இவ்வாறு அறிய வேண்டும். ஆரணமும் அங்ங னம் அருளுகின்றது. ஆரணம்—சுருதி. தாந் வைத்யுதாத் புருஷோ அமாநவ: ச ஏத்ய பிரஹ்மலோகம் கமயதி'' என் கின்றது சுருதி. இ—ள். தான் = மின்னல் உலகத்திற்குப் போனவர்களை. ச அமானவ: = அந்தச் சிறந்த மனிதன். வைத்யுதாத் = அந்த மின்னல் உலகத்திலிருந்து. ஏத்ய = அழைத்து. பிரஹ்மலோகம் = அ ய னு ல க ம். கமயதி = அழைத்து செல்கின்ருன் என்பது மறையின் பொருள்.

வருணன் முதலியோர்கள் அமானவ தேவையின் அருளைப் பெற்று அவன் காட்டிய வழியில் செல்பவர்கள் என்று அறியவும். எனவே அரிச்சிராதிகளைத் தேவதை வடிவமென்று சொன்னது முறைதான். சூ. 6,

### 5 காரியாதிகரணம். 7—14

அ—கை.

அமானவ புருஷன் யோகிகளைப் பிரஹ்ம லோகத் திற்கு அழைத்துச் செல்கிருன் என்று முந்திய அதிகாரத்

தில் மொழிந்திருக்கிறது. காரண பிரஹ்மத்தை யடைகிருஞ அல்லது காரிய பிரஹ்மத்தை யடைகிருஞ என்ற ஐயத்தை அகற்றும் பொருட்டு இந்த அதிகாரத்தைத் துவக்குகின்ருர் :-

3 3 3
**சூ. காரியம் பாதரி அஸ்ய கத்யுபபத்தே: 4—3—7**

காரியம், பாதரி, அஸ்ய கதி, உப பத்தே: என்று பிரிக்கவும்.

ப.உ. காரியம்=காரிய பிரஹ்மத்தை அடைகிருன். ஏனெனின், அஸ்ய=அயனுலகத்தில் கதி உபபத்தே:= சென்று அடைவதால் காரிய பிரஹ்மத்தைக் கொள்ள வேண்டும். பாதரி=(அவ்வாறு) பாதரி என்னும் ஆசாரியர் (கூறுகின்ருர்).

3 3
வி.உ. ''ச ஏதான் பிரஹ்ம கமயதி'' சா.உ. (4—15—5) ச=விசிட்ட புருஷன். ஏதான்=உபாசகர்களை. பிரஹ்ம கமயதி=பிரஹ்ம உலகத்தை யடையச் செய்கின்ருன் என்பது சுருதியின் பொருள். இவண் சந்தேகமுண்டாகிறது. என்ன சந்தேகம்? இவ்வுபாசகன் காரிய பிரஹ்மத்தையடைகிருஞ அல்லது காரண பிரஹ்மத்தையடைகிருஞ என்பது ஐயம். இப்பிரச்னையேன் எழுந்தது எனின், சுருதியில் பிரஹ்ம கமயதி யென்று பொதுவாகச் சொல்லியிருக்கிறது. எனவே சந்தேகமுண்டாகிறதென்பது கருத்து.

இவ்விஷயத்தில் பாதரியென்பவர் ஒருவர். அவர் தனது கருத்தைத் தருகிருர்—உபாசகன் காரியரூப அயன் உலகத்தை அடைகிருன் என்கின்ருர். காரிய பிரஹ்மம், சகுண பிரஹ்மம், ஹிரண்ய கருப்பன், என்பன வெல்லாம் ஒரு பொருளை உணர்த்த வருகின்றப் பலசொற்கள். காரிய பிரஹ்மத்தில் கதியிருக்கிறது. உபாசகன் சென்று அடைகிருன். காரண பிரஹ்மம் சென்றடையாதத் திருவு

டையது என்று திருஞானசம்பந்தரும் செப்பியிருப்பதை ஈண்டு ஊகித்து உணர்க.

காரிய பிரஹ்மம் பரிச்சின்னம், அளவுக்குள் பட்டது. ஆனால் பரப் பிரமமோவெனின்—செல்லுந்தன்மை, செயல், செல்பவன் இவையெல்லாம் அதனிடத்தில் இல்லை. ஏதனு லோவெனின், அது எங்கும் நிறைந்திருக்கிறது, உபாசகன் வடிவமாயிருக்கிறது. ஆகையால் உபாசகன் விதியின் உல கத்தையடைகிறான் என்பது பாதரியின் மதம். விதி—அயன். சூ. 7

அ—கை.

வேறு விதமாகவும் தனது கருத்தை விளக்குகிறார்:-

## சூ. விசேஷிதத்வாச்ச. 4—3—8

ப.உ. ச=மேலும் ''பிரஹ்ம லோகான் கமயதி= பிரஹ்மலோகத்திற்கு அழைத்துச் செல்லுகின்றான் என்று, விசேஷிதத்வாத்=விசேடமாகக் கூறியிருக்கிறது.

வி.உ. ''பிரஹ்ம லோகான்[1] கமயதி தே தேஷு[3] பிரஹ்ம லோகேஷு பரா: பராவதோவசந்தி'' பிரு.உ. 6—2—15) இ—ள். (விசிட்ட புருஷன்) உபாசகனை) பிரஹ்ம லோகான் கமயதி=கமலாசனன் உலகத்திற்குக் கூட்டிச் செல்கின்றான். தே தேஷு பிரஹ்மலோகேஷு=தே= அவர்கள். அப் பிரஹ்மலோகத்தில். பரா: பராவதோ= நெடிய ஆயுளைப் பெற்று. வசந்தி=அயன் இருக்குமட்டும் வாழ்கிறார்கள் என்று விசேடமாக விளம்பி இருக்கிறது. இச் சுருதியில் பிரஹ்மலோகத்தைப் பன்மையாகக் கூறப் பெற் றிருக்கிறது. இது காரிய பிரஹ்மத்திற்குப் பொருந்துமே யொழிய பரபிரஹ்மத்திற்குப் பொருந்தாது.

உபாதி பேதத்தாலும், உட்பிரிவாலும் காரிய பிரஹ மத்திற்குப் பொருந்தும். பிரஹ்ம சப்தம் முக்கியமாகக் கார ணத்தைக் குறித்தாலும் கௌண விருத்தியால் காரிய பிரஹ் மத்தைக் குறிக்கும் என்பதில் குற்றம் ஒன்றுமில்லை. பர பிரஹ்மம் விசுத்த உபாதியோடு கூடி விசிட்டமாகிக் காரிய பிரஹ்ம மாகின்றது. ''பிரஹ்மைவலோக ஏஷ சமராட்' பிரஹ்மந்தான் உலகம் என்னும் மறையின் மொழியால் பிரஹ்மத்தில் இடம், பொருள், ஏவல் இவையெல்லாம் கற் பிதம். பொய் என்பது பொருள். இதனால் உபாசகர்கள் செல்லும் உலகம் காரியபிரஹ்மம் என்பது கருத்து. சூ. 8,

அ—கை.

பிரஹ்ம சப்தம் காரிய பிரஹமத்திற்குப் பொருந்தாது. ஏனெனின், சமந்வய அதிகாரத்தில் எல்லா உலகிற்கும் காரணம் பிரஹ்மம் என்று சாற்றியிருக்கிறது. அங்ஙனம் இருக்க, காரிய பிரஹ்மம் எவ்வாறு பொருந்தும் என்பதற்குச் சூத்திரம் :-

## சூ. சாமீப்யாத்து தத் வியபதேச : 4 3—9

சாமீப்யாத், து, தத் வியபதேச: என்று பிரிக்கவும்.

ப.உ. சாமீப்யாத் = (பிரஹ்மலோகம்) காரணம் பிரஹ் மத்திற்கு) அண்மையிலிருப்பதால் தத் வியபதேச: = (அயன் உலகத்தை) பிரஹ்மம் என்று சொல்லப்படுகிறது.

வி.உ து-என்னும் சொல் சந்தேகத்தை நீக்கும் பொருட்டு. கள்ளுக்கடை முந்நிலையில் பால் சாப்பிட்டா லும் கள்ளுக் குடிக்கிறன் என்றாற் போல, நான்முகன் உல கம் பிரஹ்மத்தின் சமீபம் இருப்பதால் அதையும் பிரஹ்மம் என்று பேசுவதால் பிழையொன்றும் இல்லை. தண்ணீர் இறுகி ஐஸ்கட்டியாவது போல நிற்குணபிரஹ்மம் சகுண மாக ஆகிறது. மநோமயத்வாதி தருமங்களோடு மந்த அதி

காரியை உத்தம அதிகாரியாக்கி ஆன்மாவை அடையச் செய்கிறது. அதனுல் காரிய பிரஹ்மத்தைப் பிரஹ்மமென்பதால் தோஷமில்லை யென்பது கருத்து. சூ. 9

அ—கை.

அங்ஙனமாயின் உபாசகர்களுக்குக் காரிய பிரஹ்மத்தின் அடைவு உண்டாகுமாயின் அநாவிருத்தி எங்ஙனம் உண்டாகும், அநாவிருத்தி—மீண்டுந் திரும்பாதத் தன்மை. முக்தி யென்பது குறிப்பு. பரபிரஹ்மத்தை அடையா விடில் எவ்விதத்திலும் முக்தி யடையமாட்டாது. அவ்வாறிருக்க உபாசகன் காரிய பிரஹ்மத்தை யடைகிருனென்று எவ்வாறு சொல்ல இயலும் என்பதற்குப் பதில் சூத்திரம் :-

**சூ. காரிய அத்யயே தத் அத்யக்ஷேண[4] சஹ அத:[4] பரம்[3] அபிதாநாத். 4—3—10**

காரிய அத்யயே, தத் அத்யக்ஷேண சஹ, அத:, பரம், அபிதாநாத் என்று பிரிக்கவும்.

ப.உ. காரிய அத்யயே=காரிய ரூப அயன் உலகத்திற்கு அழிவு நேர்ந்த பின்னர். அவ்வுலகத்திலிருந்து அயனிடம் கல்வி பயின்று தத்வ ஞானத்தைப் பெற்று, தத் அத்யக்ஷணசக=அவ்வுலகத்தின் தலைவனுகிய நான்முகனேடு காரிய பிரஹ்மத்திலிருந்து பரபிரஹ்மத்தையடைகின்றனர். அபிதாநாத்=அவ்வாறு சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

வி.உ காரிய பிரஹ்மத்திற்குப் பிரளயம் உண்டான பிறகு யாருக்குத் தத்வ ஞானம் உண்டாகி விட்டதோ அவன் அங்குள்ள அயனேடு கலந்து பரபிரஹ்மத்தை அடைகிருன் இவ்வாறு கிரமமுக்தியைக் கூறும் சாந்தோக்கிய முதலிய

நூல்கள் சாற்றுகின்றன. சென்றடையுந் தன்மையுடையது பரபிரஹ்மம் அன்று. இப்பொருளை உபபத்தி யென்னுஞ் சொல் உணர்த்துகின்றது. எனவே உபாசகர்களுக்கு அநாவிருத்தியென்றதால் குற்றமொன்றும் இல்லை. சூ. 10

அ—கை.

கூறிய பொருளை யுறுதி செய்யும் பொருட்டு அடுத்த சூத்திரம் :-

1

## சூ. ஸ்மிருதேஸ்ச 4—3—11

ப.உ. ச=மேலும். ஸ்மிருதே:=ஸ்மிருதி நூல்களிலும் உரைக்கப் பெற்றிருக்கிறது.

வி.உ. பிரஹ்மணா சஹதே சர்வே சம்ப்ராப்தே பிரதி சஞ்சரே. பரஸ்யாந்தேக்ருதாத்மாந: பிரவிசந்தி பரம் பதம் !!

இ—ள்

சம்ப்ராப்தே பிரதி சம்சரே=மகா பிரளயம் வந்ததும். பிரஹ்மணா சஹ=நான் முகனோடு கூட தேசர்வே=அங்கு சென்றவர்கள் அனைவரும் அங்கு—அயன் உலகத்திற்கு. பரஸ்ய அந்தே=உலக ஒடுக்கத்தின் முடிவில். கிருதாத்மாந: தத்வ=ஞானத்தைப் பெற்றவர்கள். பிரவிசந்தி பரம்பதம்= நிற்குண பிரஹ்மத்தை யடைகிறார்கள். இதனாலும் உபாசகர்களுக்கு அநாவிருத்தியென்றது முறைதான். ஆகலின் காரிய பிரஹ்மத்தைக் கதிப் பற்றியிருக்கிறதென்பது தெற்றெனத் தெளிவாம். கதி—செல்லுந்தன்மை. சூ. 11

அ—கை.

இதுவரை பாதரி மதத்தைத் தெரிவித்து விட்டு, இனி ஜைமினி மதத்தைத் தெரிவிப்பதற்கு சூத்திரம் :-

## சூ. பரம் ஜைமிநிர் முக்யத்வாத் 4—3--12

பரம், ஜைமிநி:, முக்யத்வாத் என்று பிரிக்கவும்.

ப.உ. ஜைமிந:=ஜைமிநி ஆசாரிய மதமாவது பரம்= கதியென்பது இங்கு பரபிரஹ்மத்தைக் குறிக்கும். முக்யத்வாத்=ஏனெனின், பிரஹ்மம் என்னுஞ் சொல்லுக்கு முக்கியமான பொருள் பரபிரஹ்மமேயாம்.

வி.உ. "ச ஏநான் பிரஹ்ம கமயதி" என்னும் மந்திரத்தில் உள்ள பிரஹ்ம சப்தம் முக்ய பிரஹ்மத்தைக் குறிக்குமேயல்லாமல் காரிய பிரஹ்மத்தைக் குறிக்காது என்பது ஜைமினி முநிவரின் மதம். பிரஹ்ம சபதம் பெரிதும் பரபிரஹ்மத்தைத்தான் பற்றும். முக்கியமிருக்கும் போது கௌணத்தைக் கொள்வது அந்நியாயமாகும். இவ்வாறு ஜைமிநி கூறுகிருர். சூ. 12

அ—கை.

வேறு விதமாகவும் தன்மதத்தை உறுதி செய்கின்ருர். சூத்திரம் :-

## சூ. தர்சநாச்ச 4--3--13

ப.உ. இவ்விஷயத்தில் சுருதியுங் கூறுகின்றது.

வி.உ தயோர்த்வம் ஆயந் அமிருதத்வம் ஏதி" சா.உ. (8-6-6) சுருதி கூறுகின்றது. இச்சுருதியும் சென்று அமிருதத்வத்தை அடைவதாக சாற்றுகின்றது. அமிருதத்வம்—அமிருதநிலே பரமாத்மாவின் கண் பொருந்துமே யொழிய சகுணத்திற்குப் பொருந்தாது. காரிய பிரஹ்மத்திற்கு அழிவு இருப்பதால் அதற்கு பொருந்தாதென்பது பொருள். தனக்கு வேருக எது பார்க்கப்படுகிறதோ அது அல்பம், எது அல்பமோ அது அழியும் என்பது மறையின் பொருள். இச்சுருதியின் பலத்தாலும், தருமத்திற்கு வேரு

கவும், அதருமத்திற்கு வேருகவும் என்று கடவல்லியில் கூறி யிருப்பதாலும் பரபிரஹ்மம் என்றுதான் கொள்ள வேண்டும் என்பதுதான் பொருள். சூ. 13

அ—கை.

மீண்டும் ஜைமிநிமதத்தை நிலைநிறுத்தும் பொருட்டு சூத்திரம் வருமாறு :-

## சூ. நச[1] கார்யே பிரதிபத்தி[4] அபிசந்தி[4] : 4—3—14

ந, ச, கார்யே, பிரதிபத்தி அபிசந்தி என்று பிரிக்கவும்.

ப.உ. பிரதிபத்தி அபிசந்தி:=பிரஜாபதே:- சபாம் வேஸ்ம ப்ரபத்யேஇவ்வீட்டை அடைய வேண்டுமென்னும் சங்கல்பம் நகாரியே=காரிய பிரமத்தின் விஷயமன்று. எத ஞலோவெனின்,''தே யதந்தரா'' என்னும் மறை மொழி யால் காரிய பிரஹ்மத்தை நீக்கிவிட்டுப் பரமாத்மாவைக் கொள்ள வேண்டும் என்பது பொருள்.

வி.உ. வாக்கியத்திஞலும் சுருதிப்பிரமாணத்திஞ லும் பிரகரணம் மெலிந்து விடுகின்றது. அயன் உலகில் உள்ள சபாமண்டபத்தில் செல்ல விரும்புகிறேன் என்ற வாக்கியம் காரிய பிரம்மத்தைக் குறிப்பதன்று. எதஞலோ வெனின்.

''நாம ரூபயோர் நிர்வஹிதா'' நாமத்தையும் உரு வத்தையும் நிர்வாகம் செய்கின்றது என்பது சுருதிப் பொ ருள். உலகத்தைக் காக்கின்றது என்பது கருத்து. இவ் வாக்கியத்தாலும் பரமாத்மாவென்று உணரலாம். ''பிராஹ் மணநாம் யசோகம் பவாமி'' நான் அந்தணர்கள் ஆன்மா வாக ஆவேன் என்று எல்லா வடிவமாக இருக்கும் ஆன்மா வையுணர்த்துகின்றது.

மேலும்—''நதஸ்ய பிரதிமா அஸ்தி யஸ்ய நாம மஹத்யச:'' எந்த ஆத்மாவிற்கு பெரியப் புகழ் என்று பெய

ரோ அந்த ஆத்மாவிற்கு பிரதிமானம்—அளவு இல்லையென் பது மற்றொரு சுருதி கூறுகின்றது. இதனாலும் இப்புகழ் பரமாத்விற்கே உரியதென்பது தெளிவு.

பிரஹ்ம தேவனுடைய இல்லத்தில் நுழையும் தன்மை ஹார்த்த வித்தையின் விஷயம்—''தத் அபராஜிதா பூர் பிரஹ்மண பிரபுவிமிதம் ஹிரண்மயம்'' அயனுலகம் யாரா லும் வெல்ல முடியாதது. அவ்வுலகம் பொன்னால் பொறிக் கப் பெற்றது. ஆகலின் பதம் என்றதனாலும் அறியப்படு வது என்பது பொருள்.

கதியென்னுஞ் சொல்லால் காரிய பிரஹ்மம் என்றும், காரணபிரஹ்மம் என்றும் இருபக்ஷத்தையும் சூத்திரத்தில் தெரிவித்திருக்கிறது. இதில் காரிய பிரஹ்மத்தையடைகி றான் என்பது சித்தாந்தபக்ஷம் போல் தெரிகிறது. ''காரி யம் பாதரி'' என்னுஞ் சூத்திரத்தில் கூறிய காரியபிரஹ்ம பக்ஷந்தான் சிறந்ததென்று தெரிகிறது. ஜைமிநி பக்ஷம் தோற்றுமாத்திரம். 14

அப்ரதீக ஆலம்பந அதிகரணம்.

அ—கை.

காரிய பிரஹ்மத்திற்குக் கதியுண்டு, பரபிரஹ்மத்திற் குக் கதியில்லையென்று முந்திய அதிகாரத்தில் மொழிந்திருக் கிறது. இவ்வதிகாரத்தில் காரிய பிரஹ்மத்தை வழிபடும் யோகிகள் அனைவரையும் அமானவபுருஷன் அயனுலகத் திற்குக் கொண்டு போகின்றானா அல்லது சிலரை மட்டும் கொண்டு போகின்றானா என்பதற்குப் பதில் சூத்திரம் :-

**சூ. அப்ரதீக[1] ஆலம்பநாங்[3] நயதீதி[3] பாதராயண[3] உபயதா[4] அதோஷாத்[2] தத்க்ருதுஸ்ச[3] 4—3—15**

அப்ரதீகாலம்பநாத், நயதி, இதி, பாதராயண: உபயதா, அதோஷாத், தத்கிருது:, ச, என்று பிரிக்கவும்.

ப.உ. அப்ரதீகாலம்பநாத் = (அமாநவ புருஷன்) அப்ரதீக உபாகர்களை. நயதி = நான்முகன் உலகத்திற்கு அழைத்துச் செல்கின்றான். பாதராயண:=(அவ்வாறு) வியாசர் கூறுகின்றார். உபயதா அதோஷாத்=சிலர் செல்கின்றனர் சிலர் செல்வதில்லையென்பதால் குற்றம் ஒன்றுமில்லை. ஏனெனின், தத்கிருது:=பிரஹ்மலோகத்தை உபாசிப்பவர்களைப் பிரஹ்ம லோகத்திற்கு அழைத்துச் செல்கின்றான்.

அ—கை.

வி.உ. ''ச ஏநான் பிரஹ்ம கமயதி'' என்பது பொதுவான சுருதி. யார் எதை வழிபடுகிறார்களோ அவர்கள் அதையடைவார்கள் என்பது தத்கிருது நியாயம். இதனால் ஐயம் உண்டாகிறது. ஐயம் என்னை சகுண உபாசகர்கள் அனைவரும் அங்கு செல்கிறார்களா அல்லது குறிப்பிட்டவர்கள் செல்கிறார்களா என்பது கேள்வி. உனக்கு எப்படித் தெரிகிறது? எல்லோருக்கும் காரிய பிரஹ்மத்தின் கதியுண்டாகிறதென்பது என்மதம். அதற்கு அவன் தரும் தருக்கம் ''அநியம: சர்வாசாம்'' எல்லவருக்கும் சமானம் என்பது சூத்திரத்தின் பொருள். சித்தாந்தி—அது முறையன்று. ஏனெனின் 'அப்ரதீகாலம்பநாந் நயதீதி' பிரதீக ஆலம்பனம் செய்பவர்களை நீக்கிவிட்டு ஏனையோர்களை திசைமுகன் உலகத்திற்கு அழைத்துச் செல்கின்றான் என்பது வாதிமதம். ஏனெனின் பகவான் பாதராயணர் அவ்வாறு அருளுகின்றார்.

'உபயதா' பிரதீகத்தை வழிபடுபவர்கள் அங்கு செல்வதில்லை, மற்றையவர்கள் அங்கு செல்கிறார்கள் என்பதால் தோஷமில்லை. பிரதீக உபாசனை—சாளி கிராமத்தில் விஷ்ணுவையும், சிவலிங்கத்தில் சிவனையும் வழிபடுதல்.

'தத்கிருது நியாயத்தினால் காரிய பிரஹ்மத்தை வழிபடுபவர்கள் இருவிதத்தாலும் குற்றம் இல்லையென்று உணர

வேண்டும். எவன் பிரஹ்ம கிருது அவன் பிரஹ்மலோக ஐஸ்வரியத்தை அடைகிருன் என்றும், நிற்குண பிரஹ்மத்வை வழிபடுபவன் நிரங்குச ஐஸ்வரியத்தை அடைகிருன்

2 2 2 4

என்றுந் தெரிகிறது. "யதாயதோபாசதே ததைவபவதி" யார் எப்படி வழிபடுகிருர்களோ அவர்கள் அப்படி ஆகிருர்கள் என்பது மறையின் பொருள்.

வழிபாட்டில் பிரஹ்மத்துவம் இல்லை, ஏனெனின், வழிபாடு அடையாளத்தை முக்கியமாகக் கொண்டிருக்கிறது. ஆனால் பிரஹ்மத்தை வழிபடுபவனும் பிரஹ்மத்தைப் பெறுகிருன் என்று பேசப்படுகிறது. இம்மாதிரி பஞ்சாக்னி வித்தையில் பகரப்பட்டிருக்கிறது. இருப்பினும் நியாயம் என்னை, எவன் சகுண பிரஹ்மத்தை வழிபடுகிருனே அவனைத்தான் அவன் அயனுலகத்திற்கு அழைத்துச் செல்கின்ருன் என்பது கருத்து. 15

அ—கை.

பிரதீக உபாசகர்களை அரிச்சி மார்க்கத்தில் அழைத்துச் செல்லாததற்கு என்ன காரணம் என்பதற்குச் சூத்திரம் :-

1 3

## சூ. விசேஷஞ்ச தர்சயதி 4–3—16

விசேஷம், ச, தர்சயதி, என்று பிரிக்கவும்.

ப.உ. ச=மேலும் விசேஷம்=நாமம், வாக்கு முதலிய பிரதீக உபாசனைகளில் முன்னே முன்னே மொழிந்ததில் பின்னே பின்னேயுள்ளவைகள் சிறந்ததென்பது பொருள். எங்ஙனந் தெரிகிறதென்பாயாகில். தர்சயதி=சுருதி சொல்கின்றது.

வி.உ. இக்காரணத்திஞலும் பிரதீக உபாசகர்கள் பிரஹ்மலோகத்தையடைகிறதில்லை. இவ்விஷயத்தில் விசேஷ[3] காரணத்தை விளக்குகின்ருர். ''யாவந் நாம்நோகதம் தத்ராஸ்ய யதாகாமசாரோ பவதி'' சா.உ. (7-1-5) இ—ள். நாமத்தைப் பார்க்கிலும் வாக்கு சிறந்தது. நாமம் ஆத்மாவென்று வழிபடுபவன் நாமம் எது வரை செல்கின்றதோ அது வரை அவனுக்குச் செல்வாக்கு உண்டாகின்றது என்றும் வாக்கு நாமத்தைப் பார்க்கினும் சிறந்தது என்றும், எது வரை வாக்குச் செல்கின்றதோ அதுவரை அவனுக்குச் செல்வாக்கு உண்டாகிறதென்றும், வாக்கை நோக்கும் போது மநஞ்சிறந்ததென்றும், மனதை ஆத்மாவென்று வழிபடுபவன் மனது எதுவரை செல்கின்றதோ அதுவரை அவனுக்குப் பெருமையுண்டாகிறதென்றும், இம்மாதிரி சுருதியுணர்த்துகின்றது.

ஒரு பயனைப் பார்க்கிலும் மற்ருெரு பயன் சிறந்தது என்று ஒன்றின் பின் ஒன்ருக உயர்த்தி உரைத்தது ஏற்றந் தாழ்வை இயம்புவதற்காக. இந்த ஏற்றந் தாழ்வு பிரதீக உபாசனையில் காணப்படுகின்றது. இவ்வழிபாடு ஆத்மாவிற்கு அதீனமாகி விட்டால் பல விசேடங்கள் உண்டாகமாட்டா. ஏனெனின், பிரஹ்மம் எல்லாமாயிருக்கிறது. ஆகையால் அங்கு பல விசேடங் கிடையாது. எனவே நாமத்தையும், வாக்கையும் பிரஹ்மம் என்று வழிபடுபவர்களுக்கு பிரஹ்மலோக அடைவு இல்லையென்பது துணிபு. 16,

நான்காவது அத்யாயத்தின் மூன்ருவது பாதம் முற்றிற்று.

நான்காவது அத்தியாயத்தின் நான்காவது பாதம்.

இந்தப் பாதத்தில் பிரஹ்மத்தின் அடைவும் பிரஹ்ம லோகத்தின் நிலேயும் அறிவிக்கப்படுகின்றன.

(1) சம்பத்ய ஆவிர் பாவ அதிகரணம் சூ. 1—3

அ—கை.

மூன்ருவது பாதத்தில் அரிச்சி ஆதி மார்க்கமாக பரப் பிரஹ்மத்தை அடைபவர்களுடைய விஷயத்தையும் பிரம்ம லோகத்தை அடைபவர்களுடைய விஷயத்தையும் பகரப்பட் டிருக்கின்றன. இங்கு இறைவழிபாடு செய்பவர்களின் எண் ணப்படி அயன் உலகத்திற்குச் சென்ற பிறகு அங்கு அவர் களுக்குரிய வேற்றுமையை உரைப்பதற்காக நான்காவது பாதம துவக்கப்படுகின்றது.

**சூ. சம்பத்ய[3] ஆவிர்[4] பாவ: ஸ்வேந[3] சப்தாத்[3]. 4—4—1**

சம்பத்ய, ஆவிர்பாவ: ஸ்வேநசப்தாத் என்று பிரிக் கவும்.

ப.உ. சம்பத்ய = ஒளிமய ஆன்மாவை அடைந்து. ஆவிர்பாவ: = (ஞானி) அந்த வடிவமாக ஆகிருன். இது எங்ஙனம் தெரிகிறது எனில், ஸ்வேநசப்தாத் = ஆத்ம சப்தத் திஞல் அறியப்படுகிறது.

வி.உ. ஏவம் ஏவ ஏஷ சம்ப்ரசாதோ[3] அஸ்மாத் சரீராத் சமுத்தாய பரம்ஜ்யோதி உபசம்பத்யதே ஸ்வேந ரூபேண அபிநிஷ்பத்யதே.

இ—ள்

ஏவம் ஏவ ஏஷ சம்பரசாத: = இந்த மாதிரி இந்த ஜீவன். இந்த உடலே விட்டு ஏகி. பரம்ஜ்யோதி வடிவ

ஆன்மாவை. உபசம்பத்ய = அடைந்து. ஸ்வேநரூபேண = நிஜவடிவபரமாத்மாவாக. நிஷ்பத்யதே = ஆகிவிடுகிருன் என்று மறையில் அருளியிருக்கிறது.

முந்திய பாதத்தில் சகுணயோகிகளுக்குத் திசைமுகன் உலகத்தின் அடைவென்றும், அவர்கள் அங்கிருந்து நிற்குண நிலையைப் பெறுகிருர்கள் என்றுப் பேசப்படுகிறது. இங்கு ஐயமுண்டாகிறது. என்ன ஐயம்? அவர்கள் தேவலோகங்களில் உள்ள போக பூமியைப் பெறுவது போல் திடீரென எழும் சில தேவதையோடு கலந்து கொள்ளுகிருர்களா அல்லது பரமாத்மாவோடு கலந்து கொள்ளுகிருர்களா என்பது ஐயம். எப்படித் தெரிகிறது? பிரதிவாதி—ஏதோ திடீர் என்று தோன்றிய தேவதையோடு கலந்தொன்ருகிருன். ஏனெனின், மோக்ஷமும் பலரூபமாக இருப்பதால் ''அபிநிஷ்பத்யதே'' இச்சொல் உத்பத்தியைக் குறிக்குஞ் சொல். ஒருவேளை ஆன்மாவாகி விடுமானல் முந்திய நிலையிலும் அந்த நினைவு வரவேண்டும். அவ்வாறு அறியாமையால் வேறு தேவதையோடு கலந்து ஒன்ருகிருன் என்பது பிரதிவாதியின் மதம்.

சித்தாந்தி—அவ்வாறு கூறுவாயாகில் அது முறையன்று. உபாசகன் ஆன்மாவையே அடைகிருன். எங்ஙனம் எனின், அந்நிய தருமத்தோடு அவன் கலக்கிறதில்லை. அந்நிய தருமத்தோடு பொருந்துவானுனல் 'ஸ்வேநரூபேண' என்னும் பதம் வியர்த்தமாகும். பிரதிவாதி—ஸ்வசப்தம் ஆத்மீய—ஆத்மாசம்பந்த பொருளைக் குறிக்கலாமே என்பாயாகில், அது பொருந்தாது. ஏனெனின் இது ஆத்ம சம்பந்தமென்று சொல்லப் படுவதல்ல. வேறு எதனேடும் பொருந்துமானல் அவ்வாறு மொழியலாம். அஃது இன்மையால் நீ கூறுவது சரியல்ல. ஆன்மாவை அடைகிருன் என்பதுதான் சாலப்பொருத்தம்.

பிரதிவாதி—மோக்ஷமும் ஆகந்துகம்—திடீரென்று தோன்றியது. பலத்வாத்—பலவடிவமானதால், சுவர்க்கத்தைப் போல என்ற அநுமானமும் காணப்படுகிறது. என்பாயாகில் வாதி—முக்திவடிவபலம் சுவர்க்கத்தைப் போலத் தோன்றி மறைவதல்ல, பின்னே, தத்வ ஞானத்தால் அக்ஞானம் நீங்குகின்றது, ஆத்மா இயல்பாக என்றும் அடைந்ததாகவேயிருக்கிறது எங்ஙனம் பிரகாசம் இருளை அகற்றியதும் பொருள் தானாக விளங்குகிறதோ, அது போலறிக. மேலும் குளத்தில் நீரிருக்கிறது, அதற்குமேல் பாசி படர்ந்திருக்கிறது. அதனால் நீர் தெரிகிறதில்லை. பாசியிருக்கிற போது நீர் தெரியவில்லை என்றால் இல்லை என்று அருத்தமில்லை. பாசியை அகற்றினால் நீர் விளங்கும். அவ்வாறு அக்ஞானம் இருக்கும் வரை ஆன்மா தெரியாது, அது அகன்றால் இயல்பாக இலங்கும். எனவே முக்த புருஷன் ஆன்மாவையடைகிறான் என்பது இனிது புலனும். சூ. 1

முக்தாத்மா ஆத்ம வடிவமான பிறகு முந்திய நிலைக்கும் இப்பொழுதும் உள்ள நிலைக்கும் என்ன வித்தியாசம் என்பதற்குப் பதில் சூத்திரம் :-

## முக்தః பிரதிக்ஞாநாத் 4 – 4 – 2

முக்த:, பிரதிக்ஞாநாத் என்று பிரிக்கவும்.

ப.உ. முக்த:=முக்த புருஷன் நிறைந்த ஆனந்த வடிவ ஆன்மாவாகி விடுகின்றான். பிரதிஞாநாத்=சுருதியில் அவ்வாறு சொல்லியிருக்கிறது.

வி.உ. சொருபநாசம் இல்லாமல் பிரஹ்மம் ஆகிவிட்டானென்றால் முந்திய நிலையிலிருந்து இந்த அவஸ்த்தையில் என்ன விசேஷம்? சித்தாந்தி—"ஏதந்து ஏவதே" என்னுஞ் சுருதியால் எல்லா இடர்களிலிருந்தும் விடுபட்டு துன்பத்தின் நீக்கமும் இன்பத்தின் ஆக்கமும் நிறைந்த ஆன்மாவாய் விடுகிறான் என்கின்றது சுருதி. இவ்வாக்கியம் சுருதியின் உறுதி மொழியெனப்படுகிறது.

''அபி நிஷ்பத்யதே'' இச் சுருதி எல்லா பந்தத்தில் இருந்தும் விலகி சுத்த ஆத்மாவோடு கலந்து ஒன்ருகிருன் என்று தெரிகிறது. முந்திய அவஸ்த்தையில் ''அந்தோ[4] ப[4]வதி'' நனவில் குருடனுக இருக்கிருன். ''ரோதிதீவ'' கனவில் அழுது கொண்டிருக்கிருன் என்றும், ''விநாசமேவ அபிதோ ப[4]வதி'' உறக்கத்தில் விஷய உணர்வுகள் ஒடுங்கினதால் அழிவையடைகிருன். இம்மாதிரி மூன்று நிலேயிலும் கலுஷித ஆன்மாவோடு கலந்து ஒன்ருயிருக்கிருன். கலுஷிதம்—அழுக்கு அல்லது பாவம். அம் மூன்று அவஸ்த்தைகளிலும் உண்மை ஞானமில்லே. இவ்வவஸ்த்தையில் மெய்யுணர்வு இருக்கிறது. இதுதான் இவண் விசேஷம். இவண்—இங்கு.

பிரதிவாதி—ஆனுல் இவ்வவஸ்த்தையில் முக்தனுகி விட்டான் என்று எங்ஙனம் தெரிகிறது? வாதி—பிரக்ஞா வாக்கியத்தால் தெரிகிறது. அவ்வாக்கியம் எது? ''ஏதம்து ஏவதே'' நான் உனக்கு இந்த ஆன்மாவைப் பற்றி மீண்டும் உரைக்கின்றேன் என்று ஆசாரியாள் அருளி, ''அசரீரம் வாவசந்தம்'' இந்த ஆன்மா சரீரத்திலிருந்தும் அசரீரம்—சரீரமற்றது. அவ்வகை ஆன்மாவை வெறுப்பும் விருப்பும் பற்றுகிறதில்லே. இம்மாதிரித் துவங்கி ''ஸ்வேநரூபேண அபி நிஷ்பத்யதே'' எவன் தனது வடிவமாக நிலேத்திருக்கிருனே அவனே உத்தம புருஷன் என்று சுருதி மொழிகின்றது என்று முடிக்கின்ருர். இந்த மாதிரி விரிவுரையாலும் தெரிய வருகிறது. ''ய ஆத்மா அபஹதபாப்மா'' இந்த ஆன்மா பாவமின்றியது. இவ்வாக்கியமெல்லாம் அசங்க ஆன்ம விஷயத்தில் பிரதி ஞானமாகும்.

மோக்ஷ அடைவு என்னும் பலனும் பந்தம் நீங்குவது தான். ஆன்மா என்றும் அடைந்ததாக இருக்கிறது. நோய் நீங்கிய பிறகு நோய் அடங்கிவிட்டது என்றது போல.

எனவே முந்திய நிலையைப் பார்க்கிலும் பிந்திய நிலை நமது சொந்த நிலை என்பது துணிவு. சூ. 2

அ—கை.

உபாசகன் எல்லாதடைகளிலிருந்தும் விடுபடுகிறான் என்று எப்படித் தெரிகிறதென்பதற்குச் சூத்திரம் :-

## சூ. ஆத்மா பிரகரணாத் 4—4—3

ஆத்மா, பிரகரணாத் என்று பிரிக்கவும்.

ப.உ. ஆத்மா=இவண் ஆத்மாவைத்தான் ஜோதி என்று சொல்லியிருக்கிறது. எங்ஙனந் தெரிகிறது? பிரகரணாத்='ய ஆத்மா' இம்மாதிரி ஆன்மாவின் பிரகரணம் ஆகும். பிரகரணம்—சொல்லுமிடம்.

வி.உ. ''பரஞ்ஜோதி: உபசம்பத்ய'' என்னும் சுருதியை விசாரிக்கும் பொழுது தனது வடிவத்தை விட்டு வேறு ஒளியை அடைகிறான் என்று தெரிகிறது. ஏனெனின் ''சூர்யோ ஜோதி:'' அக்நிர் ஜோதி என்று பௌதிகப் பொருள்களிலும் ஜோதி சப்தம் ரூடியாகப் பொருந்துகிறது. வாதி—ஒளி யென்னும் சொல் சூரிய ஆதிகளில் பொருந்திய போதினும் இங்கு ஆத்மாவைப் பேசும் இடமாக இருப்பதால் ஒளியென்னும் சொல்லால் ஆன்மாவைத்தான் கொள்ள வேண்டும்.

ஜோதியை சப்தம் பெரும்பான்மையாக பிரஹ்மத்தையே குறிக்கும். பெரும்பான்மை—முக்கியம். ஆன்மா பாவமற்றது, இறப்பற்றது என்றெல்லாம் எழில்மறை இயம்புகின்றது. ஆன்மாவை அறிவிக்கின்ற ஜோதி சப்தத்தை திடீரென பௌதிக ஒளிகளில் கொண்டு போவது முறையன்று. அவ்வாறு கொள்ளின் அந்நியாயமாகும், அநர்த்தமும்வந்து அணுகும். மேலும், ''தத் தேவா ஜோதிஷாம் ஜோதி:'' இந்திராதி தேவர்கள் பிரஹ்மத்தை ஜோதி வடிவ

மாக வழிபடுகிருர்கள் என்ற மறைமொழியாலும் காணலாம். இதன் விரிவை ''ஜ்யோதிர்தர்ஸநாத்'' என்னும் சூத்திர உரையில் காண்க. சூ. 3

2) அவிபாகேந திருஷ்டத்வ அதிகரணம். சூ-4

அ—கை.

முக்த புருஷன் பிரஹ்மத்தோடு கலந்து ஒன்ருய் விடுவாளுைல் அவன் அங்கு செல்கிருன். ஒளிமய பிரஹ்மத்தை அடைகிருன் என்று பேதப்படுத்தி கூறியிருக்கிறதே என்பதற்குப் பதில் சூத்திரம் :-

4 3 3

**சூ. அவிபாகேந திருஷ்டத்வாத் 4—4—4**

அவிபாகேந, திருஷ்டத்வாத் என்று பிரிக்கவும்.

ப.உ. அவிபாகேந= (விடுதலைப் பெற்ற மனிதன்) பரமாத்மாவோடு இரண்டறக் கலந்து நிற்கிருன். எங்ஙனமெனின், திருஷ்டத்வாத்=சுருதிகளில் அபேதங் காணப்படுகின்றது.

வி.உ. ஒளி மயமான ஆன்மாவோடு கலந்து ஒன்ருயிருக்கிறதா அல்லது வேருயிருக்கிறதா என்பது கேள்வி. உனக்கு எவ்வாறு தெரிகிறது; வேருகத் தெரிகிறது. எங்ஙனமெனின், ''ச தத்ர பர்யேதி'' அவன் தனது ஆன்மாவில் இருந்து கொண்டு அங்கும் இங்குமாகத் திரிகிருன் என்ற மறைமொழியால் தெரிகிறது. இங்கு—ஆதாரம் ஆதாயம், அதிகரணம், அதிகர்த்தவ்யம் என்றும், ''ஜோதி: உபசம்பத்ய'' என்னும் சுருதியால் கர்த்தாவும் கருமமும் காணப்படுகின்றன. இவைகளால் முக்த புருஷன் பரமாத்மாவிற்கு வேருக இருக்கின்ருன் என்பது பிரதிவாதி மதம்.

வாதி—அது பொருந்தாது—துல்யந்து தர்சனம் என்னும் நியாயத்தால் இருந்து கொண்டு ஆன்மாவை அடைகிருன். அடைகிருன்—அறிகிருன் என்பது பொருள்.

'திருஷ்டத்வாத்' சுருதிகளில் அவ்வாறு அறியப்படுகிறது. 'தத்வமசி' 'அஹம் பிரஹ்மாஸ்மி' யத்ர நாந்யத் பஸ்யதி'' 'நதுதத்துவிதீயமஸ்தி' இவ்வாக்கியங்களெல்லாம் ஒற்றுமையை யுணர்த்துகின்றன. இவைகளுக்கு முறையாகப் பொருள் நீயதுவாக இருக்கிருய், நான் அதுவாயிருக்கிறேன், எங்கு தனக்கு வேறாகப் பார்க்கிறதில்லையோ, இரண்டு இல்லவேயில்லை என்ற இவ்வேதாந்த வாக்கிய மெல்லாம் ஆன்மா இரண்டறக் கலந்து ஒன்ருயிருக்கிறதை யுணர்த்துகின்றன. நமது எண்ணப்படி நமக்கு பலன் கிடைக்கிறதென்பது தத் கிருது நியாயம். கிருது—எண்ணம்.

2 3 4 4 4 3
யதோதகே சுத்தே சுத்தம் ஆஸிக்தம் தாத்ருக ஏவ
4 4 3
பவதி ஏவம் முநேர் விஜாநத ஆத்மாபவதி கௌதம!! க.சு. 15

இ—ள்

யதா உதகே சுத்தே=எவ்வாறு தூய்மையான நீரில் சுத்தம் ஆஸிக்தம்=தூய்மையான நீரை விட்டால். தாத்திருக் ஏவபவதி=நீரும் அந்த நீராகி விடுகிறது. ஏவம்=அம் மாதிரி. முநே:=முநியினுடைய ஆத்மாபவதி=ஆத்மாவும் பிரஹ்மத்தில் கலந்து ஒன்ருய் விடுகிறது என்பது மறையின் பொருள். கௌதம என்பது நச்சிகேதனைக் குறித்துச் சொல்வது.

இந்த வாக்கியமெல்லாம் இரண்டும் ஒன்றென்று உணர்த்துகின்றன. நதி சமுத்திர நியாயம் போல உணர்த்துகின்றன. நதி சமுத்திர நியாயம் போல யூகித்து உணர்க. சுருதிகளில் பேதங் காணப்படுகின்றதே என்பாயாகில் அதுவும் அபேதத்தில் தான் தாத்பரியம் வைத்திருக்கிறது. ''ச
4 3
பகவ: கஸ்மின் பிரதிஷ்ட்டித இதி ஸ்வே மஹிம்நி'' நாரதர் ஹேபகவன்! எனதப்பனே! இப்பூமா :எதில் நிலைத்திருக்கிறது என்று வினவ, சனத்குமாரர் நாரதா! தனது மஹி

மையில் நிலைத்திருக்கிறது. என்றார். மேலும் ''ஆத்ம கிரீட ஆத்மரதி:'' ஞானிகள் தன்னிடத்திலேயே இன்புற்று தன்னிடத்தில் விளையாடிக் கொண்டிருப்பர். இவ்வாக்கியமெல்லாம் பேதத்தை அபேதப் படுத்திக் காட்டுகின்றன. இதனாலும் முக்தாத்மா ஆத்மாவில் ஒன்றாக இருக்கிறான் என்பது இனிது புலனும். சூ 4

3 பிரஹ்ம அதிகரணம் சூ—5—7

அ—கை.

முக்த புருஷன் சகல அறிவும் நிறைந்து ஆன்மாவில் நிலைத்திருக்கிறனா அல்லது எல்லா தருமங்களும் இன்றி சேதனமாத்திரமாக ஆன்மாவில் இருக்கிறனா, அல்லது சேதன வடிவமான போதினும் ஜீவனுடைய பார்வையில் கற்பித தருமங்களைக் கையாள்கிறனா என்பதற்குப் பதில் சூத்திரம் :-

3 4

**சூ. பிராஹ்மேண ஜைமிநிர் உபந்யாசாதிப்ய: 4 — 4—5**

பிராஹ்மேண, ஜைமிநி:, உபந்யாசாதிப்ய: என்று பிரிக்கவும்!

ப.உ. பிராஹ்மேண=(முக்த புருஷன்) பிரஹ்மத்தின் தருமங்களோடு இணைந்து ஆத்மாவில் இருக்கிறான். ஜைமிநி:=அவ்வாறு ஆசிரியர் ஜைமிநியின் மதம். உபந்யாசாதிப்ய:=ஏனெனின், உபதேச முதலிய வாக்கியங்களால் அங்ஙனந் தெரிகிறது.

வி.உ. 'ஸ்வேந ரூபேண' தனது வடிவமாக இருக்கிறான் என்றும் வேறு ரூபமாக இல்லையென்றுந் தெரிகிறது. இப்பொழுது அதில் உள்ள பெருமையைப் பேசுகிறார். எல்லா பந்தங்களிலிருந்தும் விடுபட்டு பிரஹ்மமாக இருக்கிறான். பிரஹ்ம தருமம் அபஹத பாப்மத்வாதித் தரும முதல் சத்யத்வாதி சங்கற்பம், சர்வக்ஞத்வாதி குணங்கள் ஈறாக உள்ள குணங்கள் அனைத்தும் ஆம்.

'உபந்யாசாதிப்ய: ''ய ஆத்மா அபஹுதப்பாப்மா, சத்ய சங்கல்ப'' இது உபந்யாசம், ''சோ அந்வேஷ்டவ்ய:'' என்பது விதி. அவன் உண்கிருன், விளையாடுகிருன், ஆனந்தமடைகிருன் என்ற வாக்கியமெல்லாம் ஞானி ஐஸ்வரியவான் என்று அறிவிக்கின்றன. அறியாததை அறிவிர்ப்பது விதி, ''ச தத்ர பரியேதி'', இவ்வாக்கியம் விதியெனப்படும், ''ய: சர்வக்ஞ; சர்வேஸ்வர:'' என்ற வாக்கியம் வியபதேசம். எனவே ஐஸ்வரியத்தோடு ஞானி ஆத்மாவில் நிலேத்திருக்கிருன் என்பது தெளிவு. சூ. 5

அ—கை.

இவ்விஷயத்தில் அவுடுலோமி யென்னும் ரிஷியின் மதத்தை அறிவிக்கின்ருர் :-

3

## சூ. சிதி தன்மாத்ரேண ததாத்மகத்வாத் இதி ஔடுலோமி : 4—4—6

சிதி தன்மாத்ரேண ததாத்மகத்வாத் இதி, ஔடுலோமி: என்று பிரிக்கவும்.

ப.உ. ததாத் மகத்வாத்=ஜீவன் சேதன வடிவமாக இருப்பதால் சிதிதன் மாத்ரேண=ஞானிசைதன்ய வடிவமாக ஆன்மாவில் நிலேபெற்று இருக்கிருன். இதி=என்று. ஔடுலோமி=அவுடு லோமி ஆசிரியர் சொல்லுகிருர்.

வி.உ. அபஹுதப் பாப்மத்வம் முதலிய தருமங்கள் பேதமாகத்தான் மொழியப்பட்டிருக்கிறது. அவையெல்லாம் சொல்லின் கற்பனேயினுல் உண்டாகின்றன. உண்மையில் ஆத்மாவிற்கு அந்நியமில்லே. தீவினே முதலிய குணங்களின் நீக்கமும் சொல்லளவேயாம். ஆனுல் சேதனந்தான் ஆன்மாவிற்கு வடிவம். எனவே ஞானி ஆத்மாரூபமாக இருக்கிருன் என்பதில் ஐயமில்லே. அவ்வாறு ஆரணமும் அருளுகின்றது—ஆரணம்—மறை. ''ஏவம் வா அரே அயமாத்மா

3 4
அநந்தரோ அபாஹ்ய: கிருத்ஸ்ந: பிரக்ஞானகன ஏவ— பிரு.உ. (4-5-13) இ—ள். யாக்ஞவல்க்கியர்—அரே= பிரிய மைத்ரேயி! ஏவம்=இம்மாதிரி. அயம் ஆத்மா=இந்த ஆன்மா. அந்தர் பாஹ்ய சூந்ய:= அகம் புறம் இரண்டிற்கும் அப்பால்பட்டது. கிருத்ஸ்ந:=சம்பூர்ண:. பிரக்ஞாகன. ஏவ=ஞான வடிவம் என்று சுருதி விளக்குகின்றது.

ஆனால் சத்யகாமன், என்னுஞ் சொல் ஆத்மாவின் வடிவமாகத்தான் சொல்லப்பட்டிருக்கிறது. இருப்பினும் உபாதி சம்பந்தப்பட்டிருப்பதால் உபாதிக்கு அதீனமாக இருக்கிறது. ஆகலின் சைதன்யத்தைப் போல ஆன்ம வடிவமாக ஆகமுடியாது. ஏனெனின் ஆன்மாவில் நாநாத்வம்—அநேகமென்னுந் தன்மை விலக்கப் பெற்றிருக்கிறது.
4 3
''ந ஸ்த்தாநதோஅபி பரஸ்ய உபய லிங்கம்'' என்னும் சூத்ர உரையில் பிரஹ்மத்தில் அநேக ஆகாரம் இல்லை யென்று விலக்கியிருக்கிறது.

ஆகையால் உண்பன உறங்குவன முதலிய சொற்களும் ஞானிக்குத் துன்பமில்லை என்பதை விளக்குவதற்காக சொன்னது. அது ஆத்மரதி, ஆத்மகிரீட, ஆத்மமிதுன என்ற பதங்கள் எல்லாம் ஆத்மாவிற்கு முக்கிய ரூபமாகப் பொருந்தமாட்டா, ஏனெனின், இவைகள் இரண்டாவது பொருள், அதற்கு அன்னியமானவை. எனவே எல்லாப் பிரபஞ்சமுமின்றியதாயும், ஆனந்தமாயும் ஞானரூபமாயும், இருக்கும் ஆன்மாவில் ஞானி நிலைத்திருக்கிறான் என்று ஔடுலோமி யென்னும் ரிஷி அருளுகின்றார்.

முக்த புருஷன் இறைவனுடைய எண்குணங்களோடு இணைந்து இறைவனிடத்தில் இரண்டற கலந்திருக்கிறானென்று சொல்வது பொருந்தாது என்று சொல்வதற்காக—சிதிதன்மாத்ரேண ஔடுலோமி ரிஷி சொன்னார் என்பது குறிப்பு. சூ. 6

அ—கை.

இவ்விஷயத்தில் பாதராயணர் மதத்தைப் பகருகின்றார், சூத்திரம் :-

4

## சூ. ஏவமபி யுபந்யாசாத் பூர்வ பாவாத் அவி

4 3 3

## ரோதம் பாதராயண: 4—4—7

ஏவம், அபி, உபந்யாசாத் பூர்வ பாவாத், அவிரோதம், பாதராயண: என்று பிரிக்கவும்.

ப.உ. ஏவமபி=அவ்வாறு ஆனபிறகு. உபந்நியாசாத்=முன்னர் மொழிந்த காரணங்களால் பூர்வ பாவாத்=பிரஹ்மத்தினுடைய எண்குணங்கள் வியவகார நிலையில் இருப்பதால் பற்றற்ற ஆன்மாவிற்கு விரோதமன்று. பாதராயண:=அங்ஙனம் பாதராயண ரென்னும் ரிஷியின் மதம்.

வி.உ. அம்மாதிரி ஆனபோதினும் உண்மையாகச் சைதன்ய வடிவ மென்று ஒப்புக் கொண்ட போதினும் விவகாரத்தை நோக்கும் போது உபந்நியாசங்கள் செய்யும் முன்னதாகத் தெளியப்பட்ட பிரஹ்மத்தினுடைய ஐஸ்வரியத்தை விலக்காதபடியால் விரோதம் இல்லையென்று பாதராயணரிஷி பகருகின்றார். ஏவம் ஔடுலோமி ஜைமிநி இவரிருவர் சொன்னது போல சுருதி ஸ்மிருதியிலும் சொல்லியிருக்கிறது. ஜைமிநி கூறிய மாதிரி ஞானி பரமாத்மாவைப் போல சிறந்த குணத்தோடு செறிந்திருக்கிறான் என்றும், ஔடுலோமி அருளியது போல் ஞானி சேதன வடிவமாக இருக்கின்றான் என்றும் மறைகளிலும் ஸ்மிருதிகளிலும் மொழிந்திருக்கிறது. இதனால் விரோதமில்லை யென்பது பாதராயணரின் கருத்து. சூ. 7

(4) சங்கல்ப்ப அதிகரணம் சூ—8—9

அ—கை.

இதுவரை பிரஹ்மத்தை யடைந்தவர்களுடைய பெருமைப்பேசப்பட்டது. இனி உபாசகன் பிரஹ்ம லோகத்திற்குச் சென்றுனே அவனுடைய நிலே இங்கு உணர்த்தப் படுகிறது. உபாசகர்கள் அயனுலகஞ் சென்றிருக்கிருர்களே அவர்களுக்கு அங்கு எந்தவித போகங் கிடைக்கிறது. எப்படி நுகர்கிருர்கள் என்று விசாரம் இவண் செய்யப்படுகிறது. சூத்திரம் :-

**சூ. சங்கல்பாதேவ[1] து தச்[3] சுருதே : 4—4—8**

சங்கல்பாத், ஏவ, து; தத், சுருதே : என்று பிரிக்கவும்.

ப. உ. சங்கல்பாதேவ = இவ்யோகிகளுக்கு இவர்கள் எண்ணப்படி யிவர்கள் பித்திருக்கள் அடையப் படுகின்றனர். தத்சுருதே : = மறைகளும் அவ்வாறு அருளுகின்றன.

வி. உ. து = உறுதி. உபாசனேகள் பல. ஹார்த்த வித்தை யென்பது[4] ஒரு உபாசனே. அதில் ''சயதி[3] பித்திரு லோக காமோபவதி சங்கல்பாதேவ அஸ்யபிதர: சமுத்திஷ்டந்தி'' சா . உ. 8-2-1) என்பது சுருதி. இ—ள். ச = உபாசகன். யதி=ஒரு வேளே. பித்திருலோக காமோபவதி= பித்திருக்கள் உலகத்தை அடைய விரும்புவானுனல். அஸ்ய =அவனுடைய. சங்கல்பாத்=எண்ணத்தினல். பித்திருக்கள் =தலேமுறையினர். சமுத்திஷ்டந்தி = அவர்களே யிவன் முன் வந்து விடுகிருர்கள் என்பது சுருதியின் பொருள்.

இங்கு தலேமுறையினர் முன்வந்து நிற்பதற்கு அவன் எண்ணம் காரணமா அல்லது வேறு சிலகாரணமா என்பது பிரச்னே. அவன் உபாசகன். பிரதிவாதி—எண்ணமுங்காரணம் இன்னும் பல நிமித்தமும் காரணம். இது எங்ஙனந் தெரிகிறது? உலகில் நாம் ஒரு காரியத்தை நினேக்கிருேம். அதோடு நடக்கிருேம், சொல்லுகிருேம்,

செய்கிறோம், அதுபோலறிக. நினைத்த மாத்திரம் பயன் கிட்டாதல்லவா. அது போல் உபாசகனும் நினைக்கணும் பிறகு செல்லணும். செயல்படணும். அதன்பிறகு அவர்கள் மனம்போல் அடைவுண்டாகும். அவர்கள்—பித்திருக்கள்.

வாதி — அங்ஙனமாயின் — சங்கல்பாதேவ என்ற வாக்கியத்தில் 'ஏவ' என்னும் சொல் பயனற்றுப் போகுமே யென்பாகில். பிரதிவாதி—இஃது அரசனுக்குச் சமானம். மற்றைய சாதனத்தின் எளிமையைக் குறிக்கும் பொருட்டு. பித்திருக்களும் நிலையிலாத எண்ணம் உடையவர்களாக இருப்பதால் எல்லாபோகத்தையும் ஈய இயலாது.

வாதி — அஃதுமுறையன்று. எதனாலோ வெனின், எண்ணம் ஒன்றினால் பித்திருலோக அடை வென்று சுருதியில் சொல்லியிருக்கிறது. இவ்வாறு பொருள் கொள்ளாவிடின் 'சங்கல்பாதேவ' என்ற ஆம்நாயம் பொருளற்றதாகும். ஆம் நாயம்—வேதம். ஆதலின் மற்றைய காரணத்திற்கு விருப் பமில்லை. அந்நியகாரணங்கள் எதுவாக வரினும் வருக, வந்து உதவி புரியினும் புரிக. யோகிகள் பிற காரணங்களை விரும்புகிறதில்லை. வேறு காரணம் விரும்பப்படுமானால் சங்கல்பம் மலடி போலாகும். அஃது வேதாந்தத்திற்கு விருப்ப மன்று.

யோகிகளுக்கு சொன்ன நெறி முறைகள் சாதாரண மக்களுக்குப் பொருந்தாது. பொதுவான மக்களுக்கும் முக் தாத்மாவிற்கும் இடைவெளி நிரம்ப இருக்கிறது. சுருதி சொன்ன மனிதர்களை இயல்பான மனிதரொடு இணைத்துப் பேசலாகாது. இதனால் எல்லா போகங்களையும் இவர்கள் எண்ணமே ஈகின்றது. பொதுவானவர்கள் எண்ணங்கள் வேறு ஞானிகள் எண்ணங்கள் வேறு. ஞானிகள் எண்ணம் ஒருபோதும் பழுது படாது. சூ. 8

அ—கை.

கூறியப் பொருளை யுக்தி மூலமாக உறுதி செய்வதற்கு அடுத்த சூத்திரம்.

1 4

## சூ. அத ஏவச அநங்யாதிபதி : 4—4—9

அத, ஏவ, ச, அநந்யாதிபதி : என்று பிரிக்கவும்.

ப.உ. அத ஏவ ச=எண்ணம் பழுது படாததால் (வித்வான்—ஞானி) அநந்யாதிபதி:=அவனுக்கு தலைவன் யாருமில்லை.

வி. உ. ஞானியின் எண்ணம் பலனையளிக்காமல் போகிறதில்லை. ஆதலால் அவனுக்கு நிகர் ஒருவருமிலர். அங்ஙனம் ஒருவர் உளரென்றால் நான்முகன் ஒருவனேயாம். அதிபதி—தலைவன். சாதாரண மக்களும் ஒரு உயர்ந்த நிலையை அடைந்த பிறகு தனக்குத் தலைவனோ சுவாமியோ இல்லையென நினைக்கிறான். இவனே ஞானி. பிரஹ்ம நிலையைப் பெற்ற இவனுக்குத் தலைவன் யாரிருக்க முடியும், முடியாதென்பது பொருள்.

2

அதய இஹ ஆத்மானம் அநுவித்யவ்ரஜந்தி
1

ஏதாம்ஸ்ச சத்ய காமான் தேஷாம் சர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி!! சா.உ. 8—1—6

இ—ள்

அதய=எவனொருவன். இஹ=இவ்வுலகில். ஆத்மானம்=ஆத்மாவை. சத்யகாமான் = உண்மையான குணங்களையும், அநுவித்ய=தெரிந்து கொண்டு, விரஜந்தி=சத்திய உலகஞ் செல்கின்றனரோ, சர்வேஷு லோகேஷு=எல்லா உலகங்களிலும், ஏதான் இவர்களுக்கு, காமசாரோபவதி=இச்சாநுசாரம் கதியுண்டாகிறது. என்று சுருதியும் சொல்லுகின்றது. சூ. 9

5) அபாவ அதிகரணம் சூ. 10—14

அ—கை.

ஞானிகள் சங்கல்பத்தால் எந்த போகத்தை நுகர்கின்றனரோ அதற்கு மனது மட்டும் போதுமா அல்லது உடலும் வேண்டுமா என்பதற்குப் பதில் சூத்திரம் :-

4 3 3

**சூ. அபாவம் பாதரிர் ஆஹஹியேவம் 4—4—10**

அபாவம், பாதரி:, ஆஹ, ஹி, ஏவம் என்று பிரிக்கவும்.

ப.உ. பாதரி:=பாதரியென்னும் முனி. அபாவம்= சரீரம் வேண்டுவதில்லை ஏவம்=யென்று. ஆஹ=கூறுகின்றார். ஹி=உண்மை யென்பதையுணர்த்துகின்றது.

வி.உ. ''மநசா ஏதான் காமான் பஸ்யன்ரமதே'' ஞானிகள் தமது எண்ணத்தினல் தாம் விரும்பிய போகங்களை நுகர்கிருர்கள் என்று சுருதிகள் சொல்லுகின்றன. தனது எண்ணத்திற்கும் போகத்தைத் துய்ப்பதற்கும் மனம் ஒன்றே போதும் என்று பாதரியென்னும் முனிவர் கூறுகிருர். மீண்டும் நான்முகன் நாட்டில் அங்குள்ள போகத்தை ஞானிகள் மனதைக் கொண்டே துய்ப்பதால் அந்நிய சாதனங்கள் வேண்டும் என்பதில்லை. சுருதிக்கும் இதுவே சம்மதம். மநம் நீங்கலாக சரீரம், இந்திரியம் மற்றுமுள்ள சாதனங்கள் தேவைப்படுமாஞல் 'மனசா' என்ற அடைமொழி நிரர்த்தகம் ஆகும். ஆகலின் முக்தி நிலையில் வேறு காரணங்கள் தேவையில்லையென்பது பாதரியின் மதம். சூ. 10

அ—கை.

இதற்கு மாருக ஜைமிநி மதத்தை ஈண்டு உரைப்பதற்காக சூத்திரம் வருமாறு :-

4

**சூ. பாவம் ஜைமிநிர் விகல்ப ஆம்நாநாத் 4—4—11**

பாவம் ஜைமிநி; விகல்ப ஆமநாநாத் என்று பிரிக்கவும்.

ப.உ. பாவம்=மனத்திற்குச் சமானம் உடல் மற்றைய உறுப்புக்கள் மோக்ஷ நிலையில் உண்டாகின்றன. ஜைமிநி:= ஜைமிநி முநிவர் இவ்வாறு மொழிகிறார்.

வி.உ. முக்தி விஷயத்தில் ஜைமிநி கூறுவதாவது முக்தி சுகத்தை நுகர்வதற்கு எங்ஙனம் மனம் தேவைப்படுகிறதோ அங்ஙனம் உடலும் ஏனைய உறுப்புக்களும் தேவையென்று உரைக்கின்றார். அதற்கு அவர் தரும் பிரமாணமாவது—ச

ஏகதா[4] பவதி[4] துவிதா[4] பவதி[4]; - சா. உ. (7—26—2) அது ஒரு விதமாக இருக்கிறது. இரண்டு, மூன்று விதமாக இருக்கிறது என்ற மறைமொழி உடல் உறுப்புக்கள் முக்தியின்பத்தை நுகர்வதற்குப் பிரமாணம் என்று ஜைமிநி முனிவர் மொழிகிறார். வேறு வேறு காயமில்லாமல் பலவாறு என்னுந் தன்மை பொருந்தாது.

நிற்குண பௌம வித்தையில் இந்த பலவிதம் விகல்பமாகப்பன்னப்பட்டிருக்கிறது. இருப்பினும் சகுண நிலையில் இந்த அளவில் ஐஸ்வரியங்கள் இருக்கின்றன. இவைகளைப் பூம வித்தையைப் புகழ்ந்து பாடுவதற்காகச் சொல்லப்படுகிறது. ஆதலின் சகுண வித்தைக்கு இது பலரூபம். அதன் பயன் என்பது பொருள். அது சகுண வித்தை. இச் சூத்திரம் பிரதிவாதி சூத்திரம். சூ. 11

அ—கை.

பிரதிவாதி சூத்திரத்திற்குப் பதில் சித்தாந்த சூத்திரம் வருமாறு :-

**சூ. துவாதஸ[4] ஆஹவத்[4] உபயவிதம்[3] பாதராயணோ[3]**
**அதః 4—4—12**

துவாதச, ஆஹலத், உபயவிதம், பாதராயண:, அத: என்று பிரிக்கவும்.

ப.உ. பாதராயண:=பாதராயண முநிவரின் மதம். அத:=இரண்டு விதமான பிரமாணம் கிடைப்பதால். உபய விதம்=உபயவிதம்—இரண்டு விதம். துவாதச ஆஹவத்= எங்ஙனம் பன்னிரண்டு நாள் செய்யும் யாகம் இரண்டு விதமோ அது போல.

வி:உ. சித்தாந்தி—உபாசகனது எண்ணம் உண்மை யாகவும் விலக்ஷணமாகவும் இருக்கிறது. எனவே உடலும் உறுப்புக்களும் ஒரு நேரம் தேவைப்படுகின்றன. மற்றொரு நேரம் தேவைப்படுகிறதில்லையென்று பாதராயணர் பகரு கின்றனர். இவ்விஷயத்தில் துவாதசம் என்னு யாகத்தை
3 3
உதாரணமாக் கூறுகின்றூர் ''துவாதஸாஹ: சத்ரம் அஹீ நஸ்ச பவதி உபேயு:'' என்பது சுருதி. செல்வந்தனுக ஆக வேண்டும் என்று எண்ணுபவர்கள் பன்னிரண்டு நாளையில் முடியும் யாகத்தைச் செய்யுங்கள் என்பது மறையின் பொருள்.

மேலும் வியாசர் கூறுவதாவது: பாதரி, ஜைமிநி இவர் இருவரும் கூறியது உண்மைதான். எங்ஙனமெனின், உபாசகன் உடம்போடு சங்கல்பம் பண்ணினுல் உடம் போடும், உடம்புஇன்றி சங்கல்பம் பண்ணினுல் உடம்பு இல்லாமலும் இருக்கிருன் என்பது பொருள். துவாதச ஆஹ மென்னும் யாகத்தில் நிறைய புரோகிதர்கள் இருந்தார் களானுல் அதைச் (சத்ரம்) என்றும் குறிப்பிட்ட புரோஹிதர் கள் இருந்தால் (அஹீனம்) என்று மொழியப்படுகிறது. அது போல அறிக. அவர்கள் கேவலமனதினுலேயும், சரீரத் தோடு கூடியும் போகத்தை நுகரலாம் என்பது பகவான் வியாசர் மதம். சூ. 2.

அ—கை.

சரீரமில்லாமல் கேவலம் மனதைக் கொண்டு எங் ஙனம் போகத்தை அநுபவிக்கமுடியும் என்பதற்கு சூத்திரம்:-

2 4
## சூ. தந்வ பாவே சந்த்யவத் உபபத்தே : 4—4—13

தந்வபாவே, சந்த்யவத், உபபத்தே: என்று பிரிக்கவும்.

ப. உ. தன்வபாவே = அயனுலகத்தில் உடல் உறுப்புக் களுக்கு இன்மையிருந்த போதிலும். சந்த்யவத் = நனவைப் போல மானசிகப்போகங்கள் அடைகின்றன. மாநசிகபோகம் —மனதில் எழுகின்ற போகம். உபபத்தே: = அவ்வாறு காணப்பெறுகின்றது.

வி. உ. திசைமுகன் உலகத்திற்குச் சென்ற உபா சகர்களுக்கு அங்கு உடலோ உரிய உறுப்புக்களோ இல்லை. அவ்வாறிருக்க எவ்வாறு அவர்கள் போகத்தை— இன்பத்தைத் துய்க்கமுடியும் என்று சிலர் கேட்கலாம். அதற்குக்கனவில் ஒருவன் பல போகங்களை யநுபவிக்கிருன். அங்கு அவனுக்குச் சரீரம் இந்திரியம் துணைபுரிகிறதில்லை. ஆயினும் மனதால் சகல போகத்தையும் நுகருகிருன்.

சந்த்ய சப்தத்தைச் சிலர் சுஷுப்தி யென்று சொல் லுகிருர்கள். அஃது பொருந்தாது, ஏனெனின் உறக்கத்தில் மனம் தனது காரணத்தில் ஒடுங்கி இருக்கிறது. அதனல் 'மநசா போகத்தைத்துய்ப்ப தென்பது' ஒவ்வாது. ஆகையால் சந்த்யம் என்னும் சொல் கனவைக்குறிப்பது தான் சாலப் பொருத்தம். சூ. 13

அ—கை.

உடல் முதலிய உறுப்புக்களோடு உபாசகன் இன் பத்தைத் துய்க்கிருன் என்பதற்குச் சூத்திரம்:-

3
## சூ. பாவே ஜாக்ரத்வத் 4--4--14

பாவே ஜாக்ரத்வத் என்று பிரிக்கவும்.

ப.உ. பாவே = சத்திய உலகத்தில் பொறிகளோடு சரீரமும் இருக்கின்றன. அதுபோல, ஜாக்ரத்வத் = நனவு போல். பித்திரு போகங்கள் அடைகின்றன.

வி.உ. பிரஹ்ம லோகத்தில் உபாசகனுக்கு உடம்பு முதலிய உறுப்புக்களன்றி கேவல மனதினுல் முன்னு ளோர்கள் இன்பங்கள் எய்துகின்றன. இருப்பினும் அது அல்பமேயாகும். சரீர இந்திரியங்களோடு நுகர்கின்ற இன்பம் அதிகம் என்பது ஜைமிநி முனிவரின் மதம். முக்தர்களுக்கு மிகுதியான சுகம் உடல் இன்றி உருது. பொருந்தா தென்பது பொருள். உடலுடனும் உடலின்றியும் முக்தர்களுக்கு இன்பம் உண்டாகும் என்பதில் குற்றமொன் றும் இல்லை சூ. 14

(6) பிரதீப அதிகரணம்.

அ—கை.

இரு விதலிங்க வாக்கியத்தால் முக்த மனிதர்களுக்கு உடம்பு ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறதே அந்தச் சரீரம் சிலையில் செதுக்கிய சரீரம் எவ்வாறு செயலற்றதோ அது போல சேதனமின்றியிருக்கிறதா அல்லது நம்மநோர் சரீரம் போல சேதனத்தோடு கூடியதா என்பதற்குப் பதில் சூத்திரம்:-

**சூ பிரதீ[3]பவத் ஆவேசஸ் த[2]தாஹி த[3]ர்சயதி 4--4--15**

பிரதீபவத் ஆவேச:, ததா, ஹி, தர்ச யதி என்று பிரிக்கவும்.

ப.உ. பிரதீபவத்=ஞானிகள் தாம் உண்டுபண்ணிய ஆக்கையில் பிரதீபத்தைப் போன்று. ஆவேச:=நுழை கிருன். ஹி=ஏனெனின், ததா=அம்மாதிரி. தர்சயதி= சுருதியவ்வாறு கூறுகின்றது.

வி.உ. 'தர்சயதி' 'ச ஏகதா பவதி'—அது ஒன்ரு கிறது, இரண்டாகிறது, மூன்று, ஐந்து என்ற மறைமொழி விளக்குகின்றது. ''பாவம் ஜைமிநிர் விகல்ப ஆம்நாநாத்''

என்னும் சூத்திரத்தில் முக்தாத்மாவை உடம்போடு கூடியவனுகக் கூறியிருக்கிறது. அவ்வுடல் கட்டையைப் போல் செயலற்றதா அல்லது சேதனங்கலந்ததா என்று கேள்வி. உனக்கு எங்ஙனந் தெரிகிறது, பிரதிவாதி எந்த உடலுடன் இருந்து கொண்டு அடுத்த உடலையெண்ணுகின்ருனே அந்த உடல் சேதனத்தோடு கூடியது, அந்நிய உடல்கள் நிராத்மகம்—சேதனமற்றது.

சித்தாந்தி—அது முறையன்று-ஏனெனின் பிரதீபவத் ஆவேச :- எங்ஙனம் முதல் சரீரத்தோடு சம்பந்தமோ அங்ஙனம் தனது சங்கல்பத்தால் எடுக்கும் உடல் அத்தனையிலும் தனது தெய்வ வலிமையினுல் நுழைகிருன். முதல் தீபம் மற்றைய தீபங்களாக எவ்வாறு மாறுகிறதோ அதுபோலறிக. ஆரணமும் அவ்வாறு அருளுகின்றது-ஏகதா ப்வதி, ஒன்ருகிறது, இரண்டாகிறது, மூன்ருகிறது, ஐந்தாகிறது என்றபடி. ஆரணம்—வேதம். இச்சுருதி ஒன்றை பலவாகக் கூறுகிறது.

இது கட்டையைப் போல, எந்திரத்தைப் போல் இருக்குமானுல் முன்னர் மொழிந்த மறைமொழி பொருந்தாது. வேறு ஜீவர்களும் நுழைய இயலாது. மேலும் உடலில் உயிரில்லாது போனுல் செயல்பட முடியாது. ஆத்மாவும் மனமும் ஒன்றுபட்டிருப்பதால் எல்லாவுடலிலும் பொருந்தியிருக்க முடியாதென்று பிரதிவாதி மொழிந்தது சரியன்று. ஏனெனின் முக்தாத்மா சத்திய சங்கல்பன், அவன் ஒரு மனதோடு தொடர்பு வைத்த போதிலும் ஏனைய யாக்கையோடும் இணைய முடியும். வேறு உடம்பை விளைவிக்கவும் முடியும்.

உலகத்தில் இரு மணிகள் ஒப்பற்ற நிலையில் இருக்கின்றன. ஒன்று விஸ்வ ரூபமணி மற்ருென்று சிந்தாமணி விஸ்வரூபமணி, நினைத்தால் விஸ்வரூபத்தை யெடுக்கும், சிந்தாமணிச் சிந்தித்தப் பொருளையுறும். அதுபோல இந்த

முக்தாத்மாவும் நினைத்த உடலை யெடுக்கவும், நினைத்த உடலில் நுழையவும் முடியும். முன்னர் மொழிந்த இரு மணிகளும் தெய்வத்தன்மை வாய்ந்தவை. அதுபோல் உபாசகர்களும் இறையருளைப் பெற்றவர்கள். ஆகையால் எல்லா வுடலிலும் நுழைய முடியும் என்பது புலனும். சூ. 15

அ—கை.

பிரதிவாதி — முக்த புருஷனுக்குப் பல சரீரத்திற்குள் நுழையுந்தன்மை எங்ஙனம் பொருந்தும்? ஏன் பொருந்தாதெனின், "தத் கேந கம் பஸ்யேத் கேந கம் விஜாநீயாத்," பிரு. உ. (4-5-15) முக்தநிலையில் ஞானி எந்தக் காரணத்தைக் கொண்டும் எதையும் பார்க்கிறதில்லையென்றும், "நது தத்துவிதீயமஸ்தி த்தோ அந்யத்விப்க்தம் யத்விஜாநீயாத்" பிரு. உ. (4-3-30) அந்நிலையில் ஆத்மாவிற்கு வேறாக ஒரு பொருள் இல்லை. அதனால் எதையும் அறிய இயலாது என்றும் "சலில ஏகோ திருஷ்டா அத்வைதோ பவதி" நீரைப் போன்று சுத்தமாகவும், ஏகமாகவும், இரண்டற்றதாயும் உள்ள ஆத்மா இருக்கிறதென்றும், கூறியிருக்க எங்ஙனம் முக்தப் புருஷன் பல்வடிவத்தையெடுக்கிறான் என்பதற்குப் பதில் சூத்திரம்:-

**சூ. ஸ்வாப்யய சம்பத்யோர் அந்யத்ராபேக்ஷம் ஆவிஷ்க்ருதம் ஹி. 4—4—16**

ஸ்வாப்யய சம்பத்யோர் : அந்யதராபேக்ஷம், ஆவிஷ்கிருதம், ஹி என்று பிரிக்கவும்.

ப. உ. ஸ்வாப்யயசம்பத்யோ : = உறக்கமும், முக்தியும் இவை (யிரண்டிலிருந்தும்) அந்யதராபேக்ஷம் = ஒன்றை விரும்பும்போது விசேஷ ஞானத்திற்கு அபாவம் உண்டாகிறது. ஹி = ஏதனாலோவெனின், ஆவிஷ்கிருதம் = சகுணவித்தையில் பல சரீரத்தை ஒப்புக்கொள்வதால் குற்றமொன்றும் இல்லை.

வி—உ. ஸ்வாப்யயம்—உறக்கம். ஸ்வமபீதோ பவதி தஸ்மாத் ஏநம் ஸ்வபிதி இத்யாசக்ஷதே,, சா. உ. (6-8-1)

என்கின்றது சுருதி. தனது சொருபத்தையடைவதால் உறக்கத்திற்கு சுஷுப்தியென்று பெயர். சம்பத்தி:- கைவல்யம்-முக்தி. ''பிரஹ்மைவ சந் பிரஹ்மாப்யேதி,, பிரஹ்மமாக இருந்து கொண்டு பிரஹ்மத்தையடைகிருன் என்பது பொருள். இந்த இருநிலையிலும் ஒன்றை விரும்பும் போது மற்ருென்றுக்கு விசேஷம் குறைவாகக் காணப்படுகிறது.

விசேஷம் என்பது கைவல்யத்தை நோக்கும் போது உறக்கத்தையும், உறக்கத்தை விரும்பும் போது கைவல்யத்தையும் சிறந்ததென்று சொல்லப்படுகிறது. கைவல்யம்—மோக்ஷம். உறக்கம் சுழுத்தி. ''ஏதேப்யோ பூதேப்ய: சமுத்தாய தாந்யேவ அநுவிநஸ்யதி ந ப்ரேத்ய சம்க்ஞா அஸ்தீதி பிரு. உ. (2-4-14) இ—ள். ஏதேப்ய : பூதேப்ய சமுத்தாய = இந்த சத்தியரூப பரமாத்மாவென்னும் பூதத்திலிருந்து உண்டாகி. தாநி ஏவ அநுவி நஸ்யதி=அதோடு அழிந்து விடுகின்றன. உடல் உறுப்புக்களிலிருந்து விடுபட்ட பிறகு இதற்கு ஒரு விசேஷ நாமங்கள் இல்லை. ''யத்ரது அஸ்ய'' எந்த ஞானநிலையில் எல்லாம் ஆத்மாவாக இருக்கிறதோ என்றும், ''யத்ரசுப்தோ ''ந கம்சந சுவப்பநம் பஸ்யதி'' இ—ள். யத்ர சுப்தோ = எதில் உறங்கின பிறகு எதையும் விரும்புகிறதில்லையோ, கனவும் காண்கிறதில்லையோ என்னுஞ் சுருதிகளால் இரண்டு இல்லையென்பது இனிது புலனும்.

இரண்டு இல்லை யென்பது உறக்கத்தைக் கருதி சொன்னது, ''தத்கேநகம் பஸ்யேத்'' என்ற வாக்கியம் முக்தியைக்கருதிச் சொன்னது. முக்திநிலையில் ஒருவிசேடமும் இல்லை என்றபடி. சாந்தமான கடலில் தரங்கம் இல்லாதது போல. இஃது யாக்ஞவல்க்கிய முனிவர் தனது துணைவிக்குச் சொன்னது. ஆபாசவாதத்தை யநுசரித்து அருளினுர்.

ஆபாசவாதம்—ஆகாசத்தில் அம்புலியிருக்கிறது. அம்புலி—சந்திரன்-புவியில் நீர் நிரைந்த குடம் இருக்கிறது.

மேலேயிருக்கும் சந்திரன் நிழல் குடத்தின் நீரில் விழுகிறது. அதற்குப் பிரதிபிம்பம் என்று பெயர். குடம் உடைந்து நீர்சிதறிபோன பின்பு அதுவே பிம்பம் எனப்படுகிறது. இஃது எடுத்துக்காட்டு. அதுபோல் இவ்வுடல் குடம், அந்தக் கரணம் நீர், ஆத்மா சந்திரன், அதனுடைய ஆபாசம்—தோற்றம் அந்தக்கரணத்தில் தோற்றுகிறது, அவ்ஆபாசனுக்கு ஜீவன் என்று பெயர். அந்தக் கரண உபாதி ஒழிந்ததும் இச்சிதாபாசன் சித்துடன் செறிந்து ஒன்றுப் போவான். அப்பொழுது ஜீவனென்கிற நாமம் போய்ச் சித்தென்கிற நாமத்தையுறுவன். இதுவே ஆபாசவாதம்.

இம்மாதிரி விசாரிக்கும் பொழுது சகுண உபாசகர்களுக்கு ஐஸ்வரியத்தினளவு குற்றமற்றதாகும். தீய வினையைச் செய்பவன் இழிந்த உலகத்தையும், காம்ய கருமங்களைச் செய்பவன் துறக்க முதலிய உலகங்களையும், பக்தர்கள் பகவானையும் உபாசகர்கள் பிரஹ்மலோகத்தையும், ஞானிகள் பிரஹ்மத்தையும் முறையாக அடைகிறார்கள் என்று அறியவும். பல உபபோக சுவர்க்கத்தைப் போல ஐஸ்வரிய அவஸ்தையும் விசேஷம் என்பது தெளிவு. சூ. 16

## 7 ஜகத் வியாபார அதிகரணம். சூ. 17—22

அ—கை.

உபாசகர்கள் தமது எண்ணம் போல உடல்களை யெடுக்கவும், விடுக்கவும், விரும்பிய போகத்தை நுகரவும், தமது வாஞ்சையால் சரீரங்களில் நுழையவும் செய்கிறார்கள் என்று சுருதிகள் செப்புகின்றன. இதனால் இவர்களான ஐஸ்வர்யம் நிரங்குசம்—தடையற்றது என்று தெரிகிறது. அதாவது தேகாதிகளை யுண்டுபண்ணுவதில் அவர்கள் பூர்ண சுவதந்த்ரமுடையவர்கள் என்று காணப்படுகிறது. அங்ஙனமாயின் ஐம்பூதங்களையும் அவர்களால் ஆக்க இயலும், அவ்வாறு அவர்களும் உலகத்தை உண்டு பண்ணு

வார்களானல், அவர்களும் ஈஸ்வரர் ஆவார்கள். அப்படி யானல் ஏகேஸ்வரவாதம் பொருந்தாது என்பதற்குப் பதில் சூத்திரம் :-

**சூ. ஜகத் வ்யாபார வர்ஜம் ப்ரகரணுத் அசந்நி ஹிதத்வாத்ச 4—4—17**

ஜகத் வியாபார வர்ஜம், பிரகரணுத், ச, அசந்நி ஹிதத்வாத், ச என்று பிரிக்கவும்.

ப.உ. ஜகத் வியாபார வர்ஜம்=ஜகத்தின் உத்பத்தி ஸ்திதி, இலயம் இம் மூன்றையும் விட்டு விட்டு மற்றய எட்டு வித சித்திகள் அடையப்படுகின்றன. பிரகரணுத்= முத்தொழிலும் இறைவனுக்கு உரியவை. அசந்நிஹிதத் வாச்ச=இறைவனைத் தவிர மற்றவர்கள் தூரத்தில் இருக் கின்றனர்.

வி.உ. இறைவனை வழிபட்டு பிரஹ்ம லோகத்திற்குச் சென்று இருக்கின்ருர்களே அவர்கள் நினைத்தபடி உடலை படைக்கின்றனர். விரும்பிய இன்பத்தை நுகர்கின்றனர். அவர்கள் வலிமை நிரங்குசமா அல்லது சாங்குசமா என்பது சங்கை. சாங்குசம்—தடை. நிரங்குசம்—தடையின்மை. பிரதிவாதி—இவர்கள் ஐஸ்வர்யம் நிரங்குசமாக இருக்க வேண்டும். காரணம், ''ஆப்நோதி சுவராஜ்யம்'' (உபாச கன்) சுவராஜ்யத்தை—தாம் விரும்பிய நிலையை அடைகி ருன் என்பது பொருள். ''சர்வே அஸ்மை தேவாபலிம் ஆவஹந்தி'' எல்லா இமையவர்களும் அவர்களுக்கு வேண் டிய பொருளை விருப்புடன் வழங்குகின்றனர். என்பது மறையின் பொருள். தை—உ. (1—5—3) ''தேஷாம் சர்வேஷு லோகேஷு காமசாரோபவதி'' அவர்கள் எண்ணிய உலகத்தின் அடைவு எளிதில் உண்டாகின்றது என்ற மறை மொழிகளால் உபாசகர்கள் விரும்பிய காரியங்

களை விரைந்து செய்ய முடியும் என்பது இனிது புலனுகின்றது என்று எதிரியியம்புகின்றுன்.

வாதி—அது முறையன்று-ஏனெனின், ''ஜகத் வியாபாரவர்ஜம்'' உலகத்தை யுண்டுபண்ணவோ காக்கவோ, அழிக்கவோ அவர்களால் இயலாது. ஆனல் அணிமாதி ஐஸ்வரியம் அவர்களால் அடையப்படும். திரிசங்கு என்னும் மன்னன் சுவர்க்க லோகம் போக விரும்பினுன். அவ்வாறு அங்கு சென்றுன், இந்திரன் அவனை அங்கு வரக் கூடாதென்று கீழே தள்ளினுன், அவன் தலைகீழாக வந்தான். அவன் கீழே வருவதை விஸ்வாமித்திரர் கண்டார், மண்ணுக்கும் விண்ணுக்கும் இடையில் ஒரு உலகத்தை யுண்டு பண்ணினுர்: அங்கு அவன் சிலகாலந் தங்கியிருந்தான். இது விஸ்வாமித்திரரின் சித்தியாகும். ஆனல் பரமனுடைய பஞ்சக் கிருத்தியத்தை அவரால் செய்ய இயலாது. அவர்—விஸ்வாமித்திரர்.

முத்தொழிலும் (நித்திய சித்த) என்றுமுள்ள இறைவனுக்குச் சொந்தமாகும். ஏனெனின், சிருஷ்டிக்கும் ஜீவனுக்கும் வெகுதூரம், சிருஷ்டிக்கும் சிவனுக்கும் மிக நெருக்கம். பஞ்சக்கிருத்தியம் பரமனுடைய தொழில் என்று பழமறைகள் முரசறைகின்றன. இறைவனுக்கும் நித்தியத் தன்மைக்கும் என்றும் தொடர்பு. உபாசகர்களுடைய சித்திகளும் இறைவனுல் அளிக்கப்பட்டதே ஒழிய இயல்பாக அவர்களுக்கு அன்று. சந்நிஹிதம்— சம்பந்தம். அசந்நிஹிதம்—சம்பந்தம் இன்மை.

முக்தர்கள் பல, சங்கற்பமும் பல, ஒருவருக்குப் படைப்பில் பிரியம் வரலாம், மற்றொருவருக்கு அழிப்பில் பிரியம் வரலாம், இங்ஙனம் வருகிறபோது பிரழ்ச்சியைத் தவிர மகிழ்ச்சி மக்களுக்கு உண்டாகப் போகிறதில்லை. முக்தர்கள் எண்ணம் முழுதும் ஒற்றுமையாக இருப்பினும் இவர்கள் எண்ணம் இயல்பாக இறைவனுக்கு அதீனமாக

இருக்கின்றது. இந்நிலை இருப்பதால் உபாசகர்களுக்கு முத்தொழிலில் அதிகாரம் இல்லையென்பது இனிது புலனும். சூ. 17

அ—கை.

மேலே சொன்ன விஷயத்தில் பிரதிவாதியின் சங்கையைக் கிளப்பி மீண்டும் அதற்குச் சமாதானஞ்சொல்லுகின்றார்—சூத்திரம் :-

**சூ. ப்ரத்யக்ஷ உபதேசாதிதிச் சேந் ந ஆதிகார்க மண்டல ஸ்த்தோக்தே : 4—4—18**

ப்ரத்யக்ஷ உபதேசாத், இதி, சேத், ந, ஆதிகாரிக மண்டலஸ்த்த உக்தே : என்று பிரிக்கவும்.

ப.உ. ப்ரத்யக்ஷ உபதேசாத்=சுருதிகளில் சொல்லியிருப்பதால். இதிச்சேந்ந=இவ்வாறு கூறுவாயாகில் அது பொருந்தாது. ஏனெனின், ஆதிகாரிக மண்டலஸ்த்த உக்தே:=அதிகாரிகளுக்காகச் சொன்ன சொல்.

வி.உ. சுருதிகளில் "ஆப்நோதி ஸ்வாராஜ்யம்" சுவாராஜ்யத்தையடைகிறார்கள் என்றும், "லோகேஷு காமச் சாரோபவதி" எல்லாவுலகிலும் எண்ணப்படிப் போகத்தை நுகருகின்றனர் என்றுஞ் சொல்லியிருக்கிறது. இதனால் அவர்களுக்கு நிரங்குச ஐஸ்வரியமென்று தெரிகிறது. இதற்குப் பரிகாரம் வேண்டும் என்பது பிரதிவாதி மதம்.

வாதி—மறைமொழியால் குற்றம் ஒன்றுமில்லை. ஏனெனின்-சூரிய மண்டலத்தில் வசிக்கும் அதிகாரிகளுக்கு சொன்னதேயொழிய உபாசகர்க்கன்று. அவர்களுக்கும் நிரங்குச ஐஸ்வரியம்—தடையற்ற செல்வம் ஈசுவரனுக்கு அதீனம். எந்த உலகத்திற்கு யார் சென்றாலும் அவ்வுலகத்தில் வாழும் இறைவனருளால் அவர்களுக்குச் செல்வமுண்டாகும். ஆகையால் அவர்கள் செல்வமும் அங்குள்ள

இறைவனைப்பற்றித்தான் இருக்கின்றது. இஃது எவ்வாறு தெரிகிறதெனின் ''ஆப்நோதி மனஸஸ்பதிம்'' அவன் மன திற்குத் தலைவனான பரமாத்மாவையடைகிறானென்று மறை கள் பகருகின்றன. அதன் பிறகு ''வாக்பதி சக்ஷுஷ்பதி'' அதுபோல் வாக்குத் தலைவன், கண்ணுக்குத் தலைவன், காதுக்குத் தலைவன், விக்ஞானத்திற்குத் தலைவன் என்றெல் லாம் ஆரணங்கள் அருளுகின்றன.

சுவராஜ்யத்தையடைகிறான் என்று சொன்ன மாத்தி ரத்தில் நிரங்குச செல்வமுடையவனாக இருப்பானானால் பிறகு ஆப்நோதி மநஸஸ்பதிம் என்று கூறுவது பொருந்தாது. எனவே சகுண உபாசகர்க்குப் போகங்களில் சுதந்திரம் இருப்பினும் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரத்தில் அவர்களுக்கு அதிகாரமில்லையென்பது உறுதி. மற்றைய இடங்களிலும் வரவேண்டுவது இவ்வாறு கொள்ளவேண்டும். சூ. 18

அ—கை.

சத்திய சங்கற்பம், சர்வக்ஞத்வம் முதலிய சிறந்த குணங்கள் இறைவனிடத்தில் இருக்கின்றன. அக்குணங்கள் இறைவனை வழிபடும் மக்களுக்கும் வருகின்றன. அதுபோல், இறைவனிடத்தில் வழிபடும் உபாசகர்க்குப் படைக்குந்- தன்மை தானே வரும் என்பதற்குப் பதில் சூத்திரம் :-

**சூ. விகாராவர்தி ச ததா ஹி ஸ்திதிமாஹ**[2]

**4—4—19**

விகாராவர்த்தி, ச, ததா, ஹி, ஸ்திதிம், ஆஹ, என்று பிரிக்கவும்.

ப.உ. விகாராவர்த்தி ச=விகாரப்படாத பிரஹ்மம் ஒன்று. ஹி=ஏனெனின் ததா = அவ்வாறு ஸ்திதிம்= இறைவனுக்கு இரண்டு நிலைகள். ஆஹ=அவ்வாறு அருளி யிருக்கிறது. (சுருதியில்)

வி.உ. சுருதி-தாவானஸ்ய மஹிமா ததோ ஜ்யாயாம்
3 3
ஸ்ச பூருஷ: பாதோ அஸ்ய சர்வாபூதாநி த்ரிபாதஸ்ய
3
அம்ருதந்திவி" இ—ள் தாவாநஸ்ய மஹிமா=காயத்திரி வடிவ பிரஹ்மத்திற்கு இவ்வளவுதான் மஹிமை. மஹிமை—பெருமை. ததோ ஜ்யாயாம்ஸ்சபூருஷ:= இதைப் பார்க்கிலும் நிற்குண பிரஹ்மத்திற்கு அதிகம் பெருமை. பாதோ அஸ்ய சர்வாபூதானி=ஐம்பூதங்களும், ஆருயிர்களும் இப் பிரஹ்மத்திற்கு ஒரு பாதமாக இருக்கின்றன. பாதம்—கால். திரிபாதஸ்ய=புருஷ வடிவ மூன்று பாதங்களும். அமிருதம் திவி=பிரகாச வடிவ ஆன்மாவில் நிலேத்திருக்கின்றன. இச் சுருதி இந்த ஆன்மாவிற்கு இரண்டு வடிவத்தையுணர்த்துகின்றது.

வேறு, விகாரரூபம். இதை (ஆலம்பனம்) பற்றுக்கோடாக உடைய உபாசகன் நிர்விகார ரூபத்தை அடைகிறுன் என்று சொல்ல முடியாது. ஏனெனின், அந்த எண்ணமுடையவன் அல்லன். ஆகையால் இரண்டு வடிவமாக இறைவன் ஆனபோதிலும் அவர்கள் நிற்குண பிரஹ்மத்தை அடையாமல் சகுண வடிவத்தை அடைகிருர்கள். அவர்கள் உபாசகர்கள். சகுணத்திலும் நிரங்குச செல்வத்தை அடையாமல் சாங்குச ஐஸ்வரியத்தை அடைகிருர்கள் என்று அறிய வேண்டும். நிர்குண பிரஹ்மஞானம் இல்லாததால் நிற்குண ஆன்மாவை உபாசகர்கள் பெறுகிறதில்லே. ஆகையால் அணிமாதி சாதிசய ஐஸ்வரியத்தை அடைகிருர்கள் என்பது புலனும். சூ. 19

அ—கை.

முன்னர் மொழிந்த விஷயத்திற்குப் பிரமாண ரூபமாக சூத்திரத்தைக் கூறுகின்ருர். சூத்திரம் :-

3

**ஸூ. தர்சயதஸ் சைவம் பிரத்யக்ஷாநு மாநே**

**4—4—20**

தர்சயத : ச, ஏவம், பிரத்யக்ஷ, அநுமாநே என்று பிரிக்கவும்.

ப.உ. ஏவம்=இம்மர்திரி. பிரத்யக்ஷ அநுமாநே= சுருதியும், ஸ்மிருதியும். தர்சயத:=பரமாத்மாவிற்கு நிர் விகார வடிவத்தை விளக்குகின்றது. ச=உறுதி.

வி.உ- சுருதி வருமாறு.

4 3 1

ந தத்ர சூர்யோ பாதி ந சந்த்ர தாரகம்!

4

நேமா வித்யுதோபாந்தி குதோ அயம் அக்நி: !!

இ—ள்.

நதத்ர=பூர்ணரூப பிரஹ்மத்தில். சூரிய:=அகிலத் தையும் விளக்கும் ஆதவன். பாதி ந = விளங்குகிறதில்லை. நசந்தரதாரகம் = இந்துவும், இனிய உடுக்களும் நபாதி = விளங்குகிறதில்லை. இமா வித்யுத:=இம்மின்னல்கள். ந பாந்தி=எங்ஙனம் விளங்கும், விளங்காதென்பது குறிப்பு. குத: அயம் அக்நி:=இந்த நெருப்பு எவ்வாறு பிரகாசிக்க முடியும், முடியாதென்பது துணிபு.

4

நதத் பாசயதே சூர்யோ நசசாங்கோ ந பாவக:

கீதை. 15-6

இ—ள். இயல்பாக இலங்கிக் கொண்டிருக்கும் இந்த ஆன்மாவை சூரியன் பிரகாசிக்கிறதில்லை, சந்திரனும் விளக்கு வதில்லை, நெருப்பும் தொடுவதில்லை, என்று சுருதியும், ஸ்மிருதியும் சொல்லி பிரஹ்மத்தை நிர்விகாரமென்று அறி விக்கின்றன. இதனுல் நிர்விகார வடிவம் பிரஹ்மம் என்பது இனிது புலனும். ஸூ. 20

அ—கை.

வருகிற காரணங்களினாலும் உபாசகர்களுக்கு திரங்கு சைமஷ்வரியும் இல்லை. இவர்களுக்கு போகத்தில் மட்டும் இறைவனுக்குச் சமானம் அதிகாரமுண்டு என்பதற்குச் சூத்திரம் :-

4 3 3
சூ. போகமாத்ர சாம்யலிங்காச்ச 4-4-21

போகமாத்திர சாம்யலிங்காத்,ச, என்று பிரிக்கவும்.

ப.உ. உபாசகர்களுக்கு இறைவனோடு போகத்தில் மட்டும் சாம்யம்—சமானத்தன்மையுண்டு. ஆகையால் அவர்களுக்குச் சிருஷ்டியில் அதிகாரமில்லை.

வி.உ. போகமாத்திரத்தில் அதிகார மென்று எங்ஙனந் தெரிகிறதெனின், சுருதிவருமாறு— ''தமாஹ ஆபோவை கலுமீயந்தே லோகோ அசௌ''

இ—ள்.

தம் 'ஆஹ ஆபோ = உபாசகனை நோக்கி நான்முகன் நவிலுகின்றார்—நான் எந்த போகத்தை நுகர்கின்றேனே அந்த போகத்தை நீயும் நுகர்வாயாக என்றும் மேலும், ''ச யதா ஏதாம் தேவதாம் சர்வாணி பூதாநி அவந்தி ஏவம் ஹ ஏவம் விதம் சர்வாணி பூதாநி அவந்தி'' இ—ள் இந்த ஹிரண்ய கர்பனை எல்லா உயிர்களும் வழிபடுகின்றன, இவ்வாறு தெரிந்த உபாசகர்களையும் எல்லா உயிர்களும் வழிபடுகின்றன'' என்றும், மேலும், ''தேநோ ஏதஸ்யை தேவதாயை சாயுஜ்யம் சலோகதாம் ஜயதி'' இ—ள். பிரஹ்ம தேவனுடைய விரதங்களைச் செய்து வருவதால் உபாசகர்கள் இவ்வழிபாட்டின் வலிமையால் இந்தத் தேவதையோடு கலந்து ஒன்றாகி ஒரு இடத்தை அடைகிறான் என்ற பேதவாக்கியத்தாலும் என்ன தெரிகிறது? வழிபடும் இறைவனோடு போகத்தில் சமானமென்று தெரிகிறது. சிருஷ்டியில் சமானம் என்று தெரியவில்லை. சூ.21

அ—கை.

அங்ஙனமாயின் உபாசகரின் ஐஸ்வரியம் சாங்குசமாகும். அவ்வாருனல் அவனது ஐஸ்வரியம் அழிந்து போகும், அங்ஙனமாயின் அவனுக்கு மீட்டு இங்குவரும்படி நேரும். இங்கு-சம்சாரத்திற்கு. என்ற இச்சங்கையை இடித்து நொறுக்கும் பொருட்டு சூத்திரம் :-

**சூ. அநாவிருத்தி : சப்தாத் அநாவிருத்தி: சப்தாத்**
**4 – 4 – 22**

அநாவிருத்தி:, சப்தாத், அநாவிருத்தி: சப்தாத் என்று பிரிக்கவும்.

ப.உ. அநாவிருத்தி: = மீண்டு இங்கு வருவதில்லை. சப்தாத் = (ஏனெனின்) சுருதி அவ்வாறு சொல்லுகின்றது. இருமுறை இயம்பியது அத்யாயம் முடிவடைவதறகாக, அல்லது நூல் முற்றுப்பெறுவதற்காக எனினும் அமையும்.

வி.உ. 'அநாவிருத்தி' சூரிய கிரணத்தின் ஒளியால் தேவயான மார்க்கமாக பிரஹ்மலோகம் சென்ற உபாசகன் மீண்டும் இகத்தை நோக்கி வருகிறதில்லை. இக—சம்சாரம். 'சப்தாத்' மறைகள் அவ்வாறு அருளுகின்றன. "நச புநராவர்த்ததே" ச=அவன். ந புநராவர்த்ததே= இங்கு வருவதில்லையென்பது சுருதிப்பொருள்.

எந்த உபாசகன் சுஷும்நா நாடியோடு கலந்து பருவகாலத்தில் தேவயான வழியாக அயன் உலகத்திற்குச் சென்று அயனேடு தத்வ ஞானத்தைப் பயின்று வருபவனே அவன் கிரம முக்தியை அடைவானேயொழிய சம்சாரத் திற்குத் திரும்பமாட்டான்.

அயன் உலகம் பன்னிரண்டாயிரம் யோஜனை விஸ்த் தீர்ணமுள்ளது. அயனுலகம் மற்றைய உலகத்தைவிட மிகச்

1 1

சிறந்தது. ''யஸ்மின் அரஸ்ச ஹவை ந்யஸ்ச அர்ணவௌ ப்ரஹ்மலோகே = இப்பூமியிலிருந்து மூன்ருவது உலகம் பிரஹ்மலோகம். அங்கு அரம் ந்யம் என்னும் பெயரையுடைய கடலுக்குச் சமானம் இரு குளங்கள் இருக்கின்றன. அவை யிரண்டிலும் அமிர்தம் நிறைந்திருக்கிறது. யஸ்மிந் ஐராம்= அங்கு அந்நமய மண்டத்தினுல் களிப்பையுண்டுபண்ணப் பட்ட தடாகம் இருக்கிறது. எந்தத் தடாகம் உண்டோ அதன் அருகாமையில் அமிர்தத்தைச் சொரியும் ஒரு பெரிய அரசமரம் இருக்கிறது, எவராலும் வெல்ல முடியாத பிரஹ்ம தேவனுடையபுரம்—நகரம் இருக்கிறது. அங்கு பொன்னுல் இயற்றப்பெற்ற அரண்மனையிருக்கிறது. அதன் அருகாமை யில் வெகு விதமான மந்திரம், அர்த்தவாதம்,—புகழ்ந்து பாடு வது. பலவித கானங்கள் பாடல்கள் பாடப்படுகின்றன. இவ் வகையான போகங்களைத் துய்த்து சந்திர உலகத்தை அடைந்தவர்கள் அங்குள்ள போகத்தையுண்டு திரும்புகிருர் களே அது போல் இவர்கள் திரும்புகிறதில்லை. இவர்கள்— உபாசகர்கள்.

உபாசகர்கள் திரும்புவதில்லையென்று எப்படித் தெரி கிறதெனின், ''தயோர்த்வம் ஆயந் அமிர்தத்வம் ஏதி'' சா. உ. (8-6-6) எவன் தலையில் உள்ள சுஷும்நா நாடி வழி யாக அயன் உலகஞ் சென்று அங்குள்ள அமுதத்தை அநு பவிக்கிருனே, அவன் மீண்டும் திரும்பானென்றும், ''ஏதேந ப்ரதிபத்யமாநா இமம்மாநவம் ஆவர்த்தம் நாவர்த்தந்தே'' இந்த தேவயான வழியில் செல்லும் உபாசகர்கள் இம் மனித உலகத்திற்குத் திரும்புகிறதில்லை. (சா.உ.4-15-5) என்று உரைக்கப்பெற்றிருக்கிறது. இம் மறைமொழிகளால் உபாசகன் ஐஸ்வரியம் அழிந்து போனுலும், காரிய பிரஹ் மத்தோடு கலந்து கிரம முக்தியை அடைகிருன் என்ருல் தத்வ ஞானத்தால் அக்ஞானத்தை அகற்றிய பிரஹ்ம ஞானிக்குச் சொல்லவாவேண்டும், சொல்லாமலே ஞானிக் குப் போக்குவரவு இல்லையென்பது புலனும்.

அநாவிருத்தி உபாசகர்க்கு உரைத்த போதிலும் ஞானிக்கும் அமையும். வியாசர்க்குபாதராயண ரென்று ஒரு திருநாமம். இமையத்தின் அடிச்சாரலில் பதரியென்று ஒரு பாவனவனம் இருக்கிறது. அதிலிருந்து வியாசர் நெடுங் காலந் தவம் புரிந்தார். அதனுல் அவருக்கு பாதராயணர் என பெயர் வந்தது. இவர் உண்மையில் திருமால் அவ தாரம் ஆவர். இதனுல் இவர் எழுதிய இந்தப் பிரஹ்ம சூத்திரம் குற்றமற்ற ஞானநூல் என்பது எந்நாட்டவரும் ஒரு தலையாக ஒப்புக்கொண்டனர். சூ. 22 பிரஹ்ம சூத்திரத் தின் நான்காவது அத்தியாயத்தின் நான்காவது பாதம் முற்றிற்று.

*பவசங்கர தேசிகமே சரணம்.*

*உரை ஆசிரியர்* **சுவாமி யோகானந்தகிரி**
வேதாந்த ஆசிரியர்.

*ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடம்.*
*பிள்ளையார் பாளையஞ் சாலை.*
*தெற்குவாசல். மதுரை. 1*

உ

மதுரை ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலய வெளியீட்டின்
புத்தக விபரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) | பிரஹ்மானந்த யுக்திரத்னகரம் | ரூ. | 15-00 |
| 2) | ஞானவாசிட்டம் | ரூ. | 15-00 |
| 3) | பக்தி ஞானமிர்தம் | ரூ. | 4-00 |
| 4) | ஈசாவாஸ்ய பிரவசனம் | ரூ. | 2-00 |
| 5) | பிரமசூத்திரம் முதல் அத்யாயம் | ரூ. | 5-00 |
| 6) | பிரமசூத்திரம் இரண்டாவது அத்யாயம் | ரூ. | 5-50 |
| 7) | குருபரக்கண்ணி | ரூ. | 1-00 |
| 8) | வேதாந்த ரத்னம் | ரூ. | 1-50 |
| 9) | ஸ்ரீ முருஹ கிருஷ்ண பஜனமிர்தம் | ரூ. | 1-00 |
| 10) | சங்கர சரிதாமிர்தம் | ரூ. | 2-50 |
| 11) | பஞ்சாக்கினி வித்தையும் பக்திப் பாடல்களும் | ரூ. | 1-50 |
| 12) | நன்மொழிக் களஞ்சியம் ஐநூறு | ரூ. | 1-50 |
| 13) | சற்குருபாத வாழ்த்தும் வேதாந்த மஞ்சரியும் கீதையின் பெருமையும் | ரூ. | 2-00 |
| 14) | பிரஹ்ம சூத்திரம் மூன்றுவது அத்யாயம் | ரூ. | 15-00 |

ஸ்ரீ மீனும்பிகை அச்சகம், மதுரை-1. போன் : 32869.